வெளியூ டுவிரா யவளிச் சலமவ்
வெளிசற் றும்விரா வுதலின் றதுபோல்
விளியா துவிரா யவுயிர்த் தொகுதி
விரவும் வினையின் பயனே துமுறு
ஒளியே யுலகெங் குநிறைந் துணர்வுக்
குணர்வா கியவின் பநெடுங் கடலே
தெளிமா தவருள் ளகம்விள் ளரிய
தேக்கா ரமுதே சரணஞ் சரணம். (எ)

அருளென் றருளென் றருவோ டுருவென்
றறையும் பலபே தமுமா யவைமற்
றொருவும் பொருளா யபரா பரனே
யுடனின் றுயிரைத் தொழிலிற் புகுவித்
திருளும் வினைமாய் வினைமூந் தொறுமங்
கெய்யா மையருத் துமருட் செறிவே
தெருளும் புலனில் லவரெய் தரிய
தேக்கா ரமுதே சரணஞ் சரணம். (அ)

காட்டா கியகின் னருளுண் மையினைக்
கருதா துபுசிப் புவினைத் திறமே
வேட்டா லூழுயிர்க் கவையாய் மிடையா
பேன்மே லூழுயர்க் கருள்விக் ககனே
வாட்டா ணவம்வாட் டியுடற் பொறைவிண்
மணிமுன் னர்விளக் கெனமாப் பவனே
சேட்டா ரணமுந் தெரியா தயருந்
தேக்கா ரமுதே சரணஞ் சரணம். (கூ)

மட்டார் குழன்மங் கைபிடம் பிரியா
வரதா மதனு சகரா சரணம்
ஒட்டா தபுலிக் கலையோ டுதிசை
யுடையாய் பலவும் முடையாய் சரணம்
தொட்டா தவர்வாட் டனுருக் கெரிமு
தொலைவித் தபலிக் கிறனே சரணம்
கட்டார் தருகொன் றைமணங் கமழுங்
கபிலைக் கிரியாய் சரணஞ் சரணம். (கo)

அந்திப் பிறைசூ டியசெஞ் சடிலத்
தழகா குழகா சரணஞ் சரணம்
சந்தப் புரமூன் றுமொருங் கவியச்
சமரா டமரா சரணஞ் சரணம்
பந்தப் படுமென் னையெடுத் தருளும்
பவனே சிவனே சரணஞ் சரணம்
கந்தப் பொழில்சூழ்ந் துவளங் கதுவுங்
கயிலைக் கிரியாய் சரணஞ் சரணம். (கக)

சொல்லார் பொருளே சரணஞ் சரணஞ்
சுடருட் சுடரே சரணஞ் சரணம்
ஒல்லா ரிருளே சரணஞ் சரண
முற்றோ ரொளியே சரணஞ் சரணம்
வெல்லா வயவா சரணஞ் சரணம்
விடையா விடையா சரணஞ் சரணம்
கல்லா லமர்வாய் சரணஞ் சரணங்
கயிலைக் கிரியாய் சரணஞ் சரணம். (கஉ)

என்று தோத்திரமி யம்பிய விருந்த வன்முகம்
நன்று நோக்கிவிழை வென்னது நவிற்று கெனலும்
கொன்றை மாலிகை மிலைத்தசடி லக்கு ழகனார்
வென்ற பாதமலர் மீட்டுமுடி கோட்டி மொழிவான். ()

வேத மாதிபல வும்பொருள் விளக்கி யிருளின்
ஏத மோதியெனை யின்னருளி னண்ட ருளினை
ஆத லாலடைவ தின்றுகுறை யாதி மறைமுன்
ஓது கின்றமொழி யின்பொருளு ணமை யலதே. (கச)

மும்ம தக்கலுழி வண்டுதிறை கொள்ள முடுகுங்
கைம்ம லைக்கடவுள் போலமகன் மைக்க ணிறுவிச்
செம்ம னல்கினைபெ னக்கிதுதெ ளித்த ருளுதற்
கம்ம வையமிலை யென்றுனரு ளால் ணவினேன். (கரு)

திருவு ளக்கருணை செய்திதுதெ ளித்த ருளென
இருண்ம லப்பகையி டிக்குமற வாழி யருளும்
பொருவி லாகமம றைந்திரள்பு ராண முழுதாய்
மருவு மக்கரமொ ரைந்தனொடு மானு மிதுவே. (கசா)

ஐந்தெ ழுத்துமொரு சார்மொழிக ளைந்தெ னவுமாய்
மைந்து பெற்றவெமை யேமுழுது மார்த்தி வழுவா
தைந்தெ ழுத்துமொழி யொன்றெனவ ழங்கி வருமால்
மைந்த தேர்தியென வான்பொருடொ குத்த ருளினன்.

எண்ணில் பல்பவ மிருந்தவமு ழந்த பயனால்
நண்ணெ ணுதநவை யில்பொருளு ணர்ந்து பெரிதும்
உண்ண யந்துகண நாதனுவ கைக்க டலினன்
அண்ணல் கூறினவ கஞ்செவியி ணர்த லொடுமே. (௧௮)

ஞான சத்தியரு வாதலி னலத்த குமரன்
ஆன வித்தபொரு ளன்றிபத னுட்பொ ருளெலாம்
தான றிந்தறிக லானென விருந்த னனரோ
போன தப்பொழுது பின்னரொரு போது முருகன். ()

தந்தை தாப்புடைய கன்றுகயி லைத்த டவரை
அந்தில் வைகலுறு மந்திரமி ருந்த ருளுநாள்
எந்த வானவரு மிந்திரனு மாலு முறைசேர்
நந்தன் வார்கழலி றைஞ்சவவ ணெய்த லுறுவார். (௨௦)

வைத்த வேலினவ ரட்டினைவ ணங்கி யருளான்
மெய்த்த வன்பின்விகிர் தன்சரண மெய்தி னர்களால்
பைத்த வெண்டிரைநெ டுங்கடல்ப ரந்த வுலகின்
கொத்து மொத்தவனு மாங்கவரு டன்கு றுகுவான். (௨௧)

கற்றல் கேட்டலொடு காழறுபெ ருந்த கைமையுப்
பற்றி னருமட ருழினைமு னிந்த மைவரே
அற்றை ஞான்றிலவ லென்றுமட தந்தை யெழலுர்
மற்று வந்தனைபு ரிந்திலெனெ தூங்கி னனரோ. (௨௨)

கோட்டமங் கதிர்ம திப்புனல்த லிக்கு முடிபோன்
வேட்ட நல்வரம ளிப்பவவன் மண்ட பொழுதும்
ஒட்டை நெஞ்சினனி றைஞ்சலினெ ழுந்தி டுமவன்
கோட்டை யூழினனி நக்கமைமு மாக்கின் மதியா. (௨௩)

அண்ட கோடிகள னைத்துமவை யாக்கி நிறுவும்
அண்டரோடெளித ழற்றுமெரி வாய்க்க ணுதவிப்
பண்டு போலெவையு மாக்கியளி பாய்த்தும் விழிகள்
மண்டு கோபவெரி யானனிவ யங்கி மறல. (உச)

தந்தை முந்திளவ றன்னுழிய லாது பிறர்பால்
மைந்தி னற்றணிவி லாதவிறல் வாகு வைவிளித்
திந்த நான்முகனி ருப்புவன மாக்கு மெறுழின்
சிந்தை வைத்திடுசெ ருக்கொடுத ருக்கி வருவான். (உ௫)

எம்மை யேதுமுணர் கின்றிலனி யம்பு மறையும்
மும்மை வையகமு முன்றொழுதல் கண்டு மறிவுஞ்
செம்மை பெற்றிலனு டற்றவரு திவி னையினைக்
கொம்மை கொட்டினன்வி ரைந்தெதிர் கொணர்ந்து விடுதி.

என்றி டிக்குலமு லம்பியதெ னக்க டவுளும்
நன்று நன்றெனவ ணங்கினன டத்த லதுகண்
டன்று டங்குபடர் தேவர்முனி வோர னைவருந்
மன்ற நீத்துயிரை வெற்றுடல ராகி மருளா. (உஎ)

மைந்தன் றந்தையைப்பி கந்துமுன மாய்ந்த னமெலாந்
தந்தை மைந்தனைப்பி கந்துவரு தண்ட மொருவி
உய்ந்து போவதுள தாங்கொலென வாயி னுரையார்
சிந்தை யாலுணர நோக்கினர்சி தர்ந்து பெயர்வார். (உஅ)

அங்கி காலுமட லாழ்பிது போது மிகவின்
தங்கு மேயெனவ யர்ந்துதனி மாயன் மறைபச்
செங்கை வச்சிரவ லாரிதிகழ் கோகி லவரு
இங்கும் வந்திறகி றுங்கொலென மாழ்கி பிரிய. (உகூ)

நெரித்த வான்முகநெ ரித்தினும் றக்க வருமே
தெரித்தி லேமெனம றிந்துமதி திக்கி னடைய
மரித்து வைத்தனவெ யிற்றுநிரை வாட்க ணுகுமேல்
கரித்தி லேமெனவ ருக்கர்களர் வேடு மழல. (௩0)

அடர்ப்ப வன்மடின ருந்துதிடெ டுத்து நவின்மின்
சுடர்ப்ப தங்களில்வி ழுந்துதுணை சேர்ந்து நிமிர்மின்
விடுக்கு மென்றுவிரி நாவொடுக ரத்தி ரளினை
மடுத்த காதலினி பக்கிபெரி வல்வி ரையுற. (௩௧)

மற்றை வானவர்கள் மாதவர்கள் யாரு மறிவின்
முற்று நின்னடிமை யென்றுமுறை தாழ்ந்து பிறைமாட
பெற்று மீடுமென வோடவொளி பில்கு மவுலிக்
கொற்ற வீரனபன் முன்னைகபிடி கொண்ட னவினன். ( )

வேத நான்முகன் மேவி நற்றுமட்
கோதை வேல்வலங் கொண்ட கொற்றவன்
போதின் மேயிறைப் பனை மாக்குவோய்
பாதின் மிக்குளா பெரிய சென்றனன். (௩௩)

முனிவ னின்னணா முதல்வன் கூறலும்
தனித னின்றவர் சதுர்மு கத்தவன்
பணிபு ரத்தினன் பகர்த லொன்றிலான்
முனிதன் மேலிது புகறன் மேபினன். (௩௪)

வாழ்வு மிக்குளா யென்னில் வைகலும்
வீழ்ம னக்குறை மெத்த வுள்ளுபு
போழ்ம திச்சடைப் புனித னெந்தைமுன்
தாழ்தல் செய்திடச் சார்கு வாயலை. (௩௫)

வலன்பட் டத்திபே னென்னனல் வந்தவன்
தலைவு மெய்ப்பிபாற் கோட்பட் டங்குறி
அலம ராவுள மலமந் தத்தரம்
சிலவு நக்கிடாய் செய்கை பெற்றலாய். (௩௬)

இன்ன தன்மையா லீடி லெண்குணம்
மன்னி யெங்கணு மலர்ம ணட்டமெனத்
துன்னி யாரியர்த் தொகுதிக் கைந்தொழில்
முன்னி யாற்றுமம் முதல்வ னீயலை. (௩௭)

உலகு யிர்ப்பதி னுயர்ந்து ளேனெனில்
அலகி லண்டமு மாக்கு நின்னையும்
குலவு மாலையுங் கோணை வன்கணத்
தலைவர் தம்மையுந் தந்த தில்லையே. (௩அ)

தஞ்ச மின்றியுஞ் சமைக்க வல்லையேல்
எஞ்சு நின்றலை யிழைத்துக் கோடிமுன்
துஞ்சி னைய்கொலோ தோற்ற நின்னதேல்
விஞ்ச வின்னினிக் காண்டும் விறலை. (௩௯)

சகல ரும்பலர் சத்து வக்குணம்
தொகுவர் நீயதிற் றேற்ற முற்றிலை
இகுமி ராசதத் திழித மோகுணம்
புகுநர் நிற்புறங் கண்டு ளாருளார். (௪௦)

எவற்றி னுமிங் கென்னை யாணவத்
தவற்றி னைத்தெறுந் தத்து வத்தினைக்
கவற்ற லின்றியே கண்டு வல்வினை
துவற்றன் மேலெனத் துணிந்து ளாயெனில். (௪௧)

தத்து வத்தினைத் தவவி ளக்குவ
உத்த மத்துயர் மறைய வற்றின்முன்
வைத்த சொற்பொருள் வழங்கு மாற்றநீ
செத்து நிற்றியேற் றெறுதற் பாலையே. (௪௨)

இன்ன வாறெலா முயிர்த்திறக் கேட்டினை யெடுத்துப்
பன்னு மேல்வையும் பணிந்திரந் திலன்பரி வுழப்போர்
என்னும் வாலறி வெத்திறத் தூட்டினு மெய்தார்
கொன்னும் வாயுளான் மூகைமைக் கொள்கையே மிக்கான். ()

செதுப்ப மூந்நலை மாலையந் திரட்கனை நோக்கி
வெதுப்ப வெந்துய ருள்ளகம் வெச்செனப் புடைத்து
நொதுப்பில் வன்சிறை புகுத்துமி னெறிப வென்றான்
மதுப்பொ லங்தொடைக் கடம்பணி மார்பினன் றெழித்து. ()

குருதி கோப்பளித் தருவிபாய்க் குவவுத்தோட் குதிப்பப்
பொருவில் பன்மணி மோலியிற் பொடிபட்டுப் பொழியத்
திருவு மற்றவன் றேசுநற் சிருட்டியுஞ் சிந்த
உருவ வன்கணாம் விரன்மடித் தோர்சின சிரத்தில். (௪௫)

எருக்கி வன்கரம் பிறையெனப் பிடர்கொடுத் தெற்றி
மருக்கி ளர்ந்ததார் மணிவடம் வழித்தலைச் சிந்தக்
தருக்க ழிந்துநீர்த் தாரையில் விழிச்சுடர் சாம்பப்
பொருக்கெ னக்கொடு போந்தருஞ் சிறைப்புகு வித்த. (௪௬)

உளைய வேற்றவ ரொறுத்துழி யஞ்சலென் றேம்பும்
களைக ணாகிய தந்தைதாய் கடிமழ வென்ன
விளைவ தோர்கிலா விரிஞ்சன்வே றொருதுணை யின்றி
அளைய ருஞ்சிறைப் பெருந்துயர்த் துணையொடு மாழ்ந்தான். ()

பாம்பின் வாய்ப்பல நாட்படு பரிதியு மறிவங்
கோம்பு முள்ளமோ டுலைப்பிணைட் கருப்படு மழவும்
கூம்பு றுதுயன் ணுள்விரி கங்குலின் விழியும்
தேம்ப ருஞ்சிறைத் திசைமுகத் தவனிக ராணன். (௪௮)

கணவ னார்சிறைப் படுவது கருதினள் கொல்லோ
தணவு றுதவ னைவகந் தவிர்ந்தவொப் பனையாள்
இணர்கு லாந்தருத் தாமரை பிணையிணை மற்றும்
அணவி வாழ்தரு மகபென முன்னரே யமைத்தாள். (௪௯)

விரகு மேவரி னரகமுந் துறக்கமே வெதிர்க்கும்
நரக மேவிர கில்வழி நயத்தகு மிடமும்
அரவ மாலைபன் கபிலைபு மலரவன் றனக்குப்
புரவி லாத்துயர்க் கதியில் பவனமா கியதே. (௫௦)

தேவ ராயினு ரின்பமே நரகினிற் றிளைக்கும்
பாவ ராயினர் துன்பமே படிறு பவனும்
பூவ ராயின ரேநகர் வாரெனப் புகல்வார்
காவ னுன்முக னிடும்பைநோய் கண்டிலார் போலும். (௫௧)

ஏழவ ரென்றுட னெண்ணிடு முதன்மையு முனிவர்
தேவர் யாவரும் பணிபுரிந் துயர்தரு திருவும்
நாவி யங்குழன் மாதரார் கலவியி னயப்பும்
ஆவ விற்றவா றெனவிலா வித்துள மயர்வான். (௫௨)

கறுவு கொண்டிடி னுலகெலாங் கவிழ்த்தருள் கொள்ளின்
நிறுவு மாற்றன்மா தவர்நெடுந் தேவர்யா வரையும்
பெறுதல் வல்லயான் பிழையிற் பிணையுமா செய்தோன்
சிறுவ னேயென நினைதொறுந் தெருமரா நின்றான். (௫௩)

தன்னின் மேம்படு மாற்றலர்ப் பிழைப்பது தகாதால்
அன்னர் தம்மின்மேம் பட்டவ ருண்மிகுந் துழியும்
கன்னி பாகனார் பேரருட் கடலினிற் றிளைத்து
முன்னி னேற்கிங்க ணிதுவந்து முடிதலி னென்பான். (௫௪)

போது தவ்வெனக் கேண்மையர் தவ்வெனப் புல்லும்
மாதர் தவ்வென மைந்தர்க டவ்வென வானில்
கோதில் சத்திய வுலகந்தவ் வெனவென் றன் கொள்கை
யாதுந் தவ்வென விறக்கவும் நன்றென வினைவான். (௫௫)

பெருமை தக்கபிற் சிறுமைவந் தடுப்பினப் பிறப்பை
வருபி றப்பினு ளொன்றென வைக்கவும் படுமோ
ஒருசி ரம்பிரா னுண்கல னுக்குநாட் செல்லல்
முருக னுக்ககற் கிடும்பிரை யெனமுன்னிக் கரைவான். (௫௬)

நெடிய மாயனுந் தலைபொன் றுநிலத்திடை வீழ்த்து
முடிவு பெற்றனன் பன்முறை பிளிவர முயன்றான்
கொடிய பால்வினை போல்வதூஉ மெவர்தமைக் குறுகா
தொடிகள் பெற்றதென் றாழுடை வலியையு நினைப்பான். (௫௭)

கற்றல் கேள்விநன் றுடையவர் தமக்குமூழ் கலக்க
முற்று மேல்லையி லதன்பய னறிவுமுற் றமல்
செற்று றுத்துபீ சன்றெழிற் பிறக்கையுஞ் சிந்தித்
தற்ற முற்றவ னுற்றவே துவுஞ்சிறி தறிந்தான். (௫௮)

மானின முடல்சிந்த வால்வெடித் தெழுசிங்கம்
ஊனிவர் கும்பத்தி னூறுசெய் தெய்த்தோரும்
கானிவர் மதமூன்றுங் கதிர்மணி வரன்றொழுகித்
தேனிவர் வரையெல்லாஞ் சித்திரத் தனபோன்ற. (௬௬)

பாரித்த வெறுமெருத்துப் பானிற வுளைவயமா
வாரித்த வயிற்குவவு மத்தகத் துகுமணியும்
சீரித்த மணிமருப்புஞ் செற்றுபு சுவையமிழ்தம்
பூரித்த மதிகோடி புணர்ந்தென வொளிவீசும். (௬௭)

ஆணடி நிழலோம்பி யமர்துயின் மகண்மாவை
ஏணமர் வரைச்சிறுவ ரெய்ப்பிற்பி ரெனவண்மின்
காணுநர் காணன்கிற் கன்னிய ரெனவியவாப்
பூணுறு பாரத்தாற் பூட்டினர் போகநுவார். (௬௮)

புழுகொடு கத்தூரி புள்ளுவர் பலர்கொண்மார்
ஒழுகிய வரையெங்கு முலம்பிய கரிநாடும்
முழுவலிச் சிபத்தின் முழக்கினுக் குளமஞ்சி
விழுமவை யெளிதாக வெஃகினர் பெயர்த்தெழுவார். (௬௯)

ஏலமொ டிலவங்க மிளகுபச் சிலைமஞ்சள்
வாலிய கப்பூர மனைத்தகுங் குமஞ்சாந்தம்
ஆலிய வகில்வாழை யாசினி முதலாகச்
சாலவின் னவர்விழையுந் தகையன வகையனவே. (௭௦)

கீற்றுவெண் மதிக்கோடு கெழுமலிற் றொடைசிறுத்
தேற்றுளி யுகுவதனைத் தீம்புனற் றனைக்கொண்டை
ஏற்றுண வாயணரி யிருப்பன மறைமொழிவாய்
தோற்றினர் புனலழுந்தாந் தூக்கவர் நிலைகாட்டும். (௭௧)

சிலையென நனிவாங்கிச் செற்றிய தென்மிசையாக்
கொலைபுரி மதவேழங் கொம்மென விடுவேழம்
அலைபுரி தூண்டிலென வையென நிமிர்ந்தோங்கி
நிலைபுரி வாளியெனச் செந்நிலை நின்றிடுமே. (௭௨)

இந்திரற் கரசு மன்றே யிற்றதா லிவ்வா றெங்கோன்
முந்திய படைப்புக் காப்பு முருக்கலோ டுளுற்றி நீதி
தந்துயிர் மறைப்பி னீக்கித் தனியருளுறுத்தா நிற்ப
வந்துவந் தொழிந்த தேவர் வருடங்கள் பலவு மாதோ. (அ0)

எண்குணந் தனக்கே யன்றி யில்லாதா யெங்கு நின்ற
ஒண்குணப் பொருளே யான வுத்தமக் குமரப் புத்தேள்
நண்குணத் தவர்தங் கோளு நயக்குமே யென்ன லாங்கும்
வண்குணத் தவனே பேற்றின் வயக்குமா லவர்க்கொன் றின்றே.

முற்றிய செல்வ நல்கு முதல்வர்பாற் றருக்கி னன்றே
சுற்றமு மினமுந் தானுந் துறப்பதற் கைய மில்லை
கற்றையஞ் சடிலத் தேவாங் கந்தனை யிகந்த வேதன்
மற்றவ ரோடுஞ் செய்கை மறுத்தினை திருந்த வாற்றால். ()

பற்றிக றனக்கொன் றின்றிப் பணிபுரி யடியார்க் கான
பற்றிக றழுவி நீக்கும் பராபரக் கடவுட் செவ்வேள்
முற்றுமத் தொழிலிற் பட்ட மூதுயிர் பெற்ற பேற்றை
இற்றெனக் கிளக்க லாமே யெஃகறி வுடையோர்க் கேனும். ()

கண்டவர் பிறவி மாய்க்குங் கமண்டல மக்க மாலை
கொண்டிரு கரத்துச் சார்வோர் கொடும்பய மொதுக்கி நல்க
ஒண்டொடிக் கமலச் செங்கை யோரிரண் டமைத்தவ் வாற்றின்
விண்டலர் கடப்பந் தாரான் வீற்றிருந் தருளு நாளில். (அச)

பொறிவரிச் சுரும்பு மூசாப் பொலந்தொடை யமரர் விண்ணின்
நெறியுளி செங்கோ லோச்சு நெடுந்தகை யுலக முண்ட
வெறிகமழ் துளபத் தொங்கல் விண்டுமா தவர்கள் யாரும்
செறிகதி ரிமைப்ப விசுந் தெள்ளொளிக் கயிலை சார்ந்தார். (அரு)

வாயிலி னந்தி பாதம் வணங்கினர் விடைகொண் டேகிப்
பாயின பருமவல்குற் பைந்தொடி யோடு வைகும்
ஆயிர நாமத் தண்ண லடிமல ரன்பிற் றாழ்ந்து
மேயின துதிகள் செய்து விரிகரங் குவித்து நின்றார். (அசா)

கவலைநெஞ் சலைப்ப நின்ற கடவுளர் தம்மைச் செந்தேன்
துவலைசெய் கொன்றை மாலைச் சுந்தர னருளி னோக்கி
நவிலுதிர் வரவை யென்ன நவிற்றவஞ் சதுமுக னென்றார்
சவலையி ரைம்முக னஞ்சல் சாற்றுதி ரென்னச் சொல்வார். (௮௭)

இடும்பையங் கடலுட் டாழ்ந்த வெங்களை யெடுக்கத் தோன்றும்
கடம்பனை யிளைய னாகக் கருதியென் கமலத் தோன்றல்
மடம்படு பேதை நீரால் வணங்கில னிங்குப் போந்து
குடம்பையு ளலண்டு போலக் கோட்படும் வினையன் மீண்டான்.

ஆன்வழிக் கொல்லும் வேத னவன்றனைப் பற்றி வல்லே
ஈண்வரு கென்ன வீர னெதிருப்ப மறையி னாதி
ஊன்வளர் பிரண வத்தி னுறுபொருள் வினவி மொத்திக்
தேன்வழி மழலைத் திஞ்சொற் செப்பல்வன் சிறையி லிட்டு. ()

ஆங்கவன் படைப்பி னோடு மடிகளெம் பாங்கர் வைத்த
ஓங்கிய பணியுந் தானே யுஞற்றிவெங் கடத்தில் வைகும்
ஈங்கிதன் பொருட்டு நின்னை யெய்தினே மென்று போற்றப்
பூந்துழா யமையை நோக்கிப் புராண னவர்க்குச் சாற்றும். (௯0)

செம்மைய ஞான சத்தித் திருவருட் கொம்ப ரெம்மல்
அப்பின்வே றல்லன் யாமு மவனின்வே றல்லேங் கண்டாய்
அப்பழு வடிவி னன்பா லன்புசெய் தவர்பி ழைத்தோர்
நயப்புக் கொண்டு செய்தோர் நவைபடப் பிழைத்தோ ராவர்.

இக்கவப் பிழைபுட் பட்ட வேதனைக் குறுக்க தண்டம்
தக்கதே யெல்லா றன்னோன் றனைச்சிறை யிரிவித் திட்டல்
தொக்குவந் தருத்தீர் நீயிர் சொல்லுமி னென்னச் செந்தேன்
நக்கலர் கொன்றை யான்மு னடுங்கிய வுளத்திற் சொல்வார். ()

பண்டுதந் திருவர் பட்ட படர்பெரும் பிழையை நோக்கிக்
கண்டொரு செயலு மில்லாக் காலத்துக் கருணை யைத்துக்
கொண்டுநீர் பருவ நோக்கிக் கோளைபோய்ப் பருளிற் றந்த
அண்டனிப் பிழையுள் ளையா கண்பதின் றிருந்தோ மன்றே. ()

அவ்வயிற் சேறு மாயி னடக்குமென் றஞ்சு கின்றேம்
இவ்வயிற் சார்வு மஞ்சி யிருந்தன மின்று காறும்
ஒவ்வரும் பொருளே நீப்பி னுயங்குவே மன்ற வன்றி
எவ்வயிற் சேறு மெந்தா யிரங்குகென் றிரந்து தாழ்ந்தார். ()

தாழ்ந்தவர் வறிய ராகாத் தன்மையன் கருணை கூர்ந்து
போழ்ந்தநுந் துயரந் தீர்மி னெனவருள் புரிந்து பொற்றார்
ஊழ்ந்துக வமரர்த் தாக்கி யொளிர்ந்தவேத் திரத்திண் கையின்
வாழ்ந்திடுங் காவ லாளை வருகென வழைத்துக் கூறும். (௯௫)

பொலங்குவட் டருவி தத்திப் பொன்மணி வரன்றி வீழ்ந்து
நிலங்கிழித் தொழுகி யோடி நமிரும்வேங் கடத்தை யண்மி
அலங்கலங் கடப்பந் தாரா னடிமல ரன்பிற் றாழ்ந்து
நலங்கிளர் குடைந்த முற்று நயத்தகு துதிக ளார்த்தி. (௯௬)

உருவம்வே றன்றி யைந்து முகனாறு முகனென் றேத்துந்
திருவுரு விரண்டன் மாட்டுஞ் சிவமெனும் யாமே மன்ற
பொருவிலா நுபராய் நிற்பேம் பொலிந்தவிவ் வுருவி னின்றும்
தருவர மவனா தாங்குத் தருவர மிவனா தாமே. (௯௭)

மாதவன் முதலோர் வேண்ட மலரவன் சிறையயர் சிக்குட்
ஏதமில் வரமீண் டாயிற் றிவ்வர மவனா தன்றே
போதனைச் சிறையை நீக்கிப் புகுதக வின்மையென் றெம்மால்
ஆதரு மின்றுஞ் சொல்லா லறைமதி மேன்மை போதும். (௯௮)

பைத்தபூஞ் சேக்கை மேலான் படர்பெருஞ் சிறையைச் சித்து
வித்தக னிங்கு மேவு மவனொடு மேக வென்றான்
அத்தனவ் வருண்மேற் றங்கி யருணந்தி தேவன் வல்லே
தொத்தலர் குளிர்பூஞ் சோலை சூழ்ந்தவேங் கடத்தைச் சார்ந்
[தான்.
எட்டுருப் பானு மைந்த ஞானுமங் கெதிரே வீழ்ந்து
பட்டலர்க் கமல மேய்க்கு மலரடி பழிச்சும் வாயான்
மொட்டுறு கமலம் வெல்ல முகிழ்துணைக் கரத்தாற் சேர்த்து
நெட்டுடற் றுவிற் கோட்டி நின்றிறை யருளி தென்றான். (௧௦௦)

பெருந்தவ முழந்து நம்பாற் பெற்றிடுந் தொழிலு நீயே
திருந்துறச் செய்தி நன்மை தீமைகண் டருளிக் காத
இருந்தனம் யாமே யன்றி யிடர்துமித் தின்ப மேய்ப்ப
வருந்திய தேவர்க் கென்றே வந்தனை நினக்கி தாமே. (௧௦௮)

என்றுளக் குப்பம்வைத் தெம்பிரா னருளும்
நன்றெனக் குமரனு நகைமுகத் துரைசெய்வான்
அற்றினர்க் காலமா யண்மினர்க் கமுதமாம்
வென்றியங் கழலிணைப் விரகிலா னென்றனை. (௧௦௯)

விரகிலான் பிரணவ மெய்ப்பொரு ளோர்கிலான்
பிரணவப் பொருளிலான் பிறழ்தரா துலகெலாம்
வரனுடைச் சிருட்டியின் வயக்குவா னலனரை
அரவிணை யெங்ஙன மளித்தனை யென்றனன். (௧௧௦)

மைந்தநீ யதன்பொருள் வல்லையே லுரையென
முந்துமெய்ப் பொருள்களு முறையன்றி யருள்செயா
எந்தையப் பொருள்பொழு திடமறிந் தியல்புளித்
தந்திடத் தக்கதன் றேயெனச் சாற்றினான். (௧௧௧)

வாய்மையே கூறினை மாசிமா மகமிதோ
மேயதா னீயுளம் விழைதகப் பயிலிடம்
ஆயசீர்க் கணிகவெற் பமைந்துளந் தகப்பொருட்
கேயுமா றேற்குது மேகுது மவ்வயின். (௧௧௨)

வந்தனை போதென வானவ ரிந்திரன்
பைந்துழாய்த் தொடையினன் படர்கணந் தொடர்தர
இந்துவி னிமிழ்கதி ரிரசதப் புரிபொருஉம்
செந்துவர்ச் சடைமுடிச் செம்மலங் கண்மினன். (௧௧௩)

வளமலைச் சாரலின் வடகிழக் கெல்லையின்
இளமதிச் சடையவிழ்த் திம்பரிற் றாழ்த்துபு
களமிகுப் போரெனக் கருதருந் தியானமோ
டுளமலி தவமொரு கணிகமுற் றனரே. (௧௧௪)

வழிபடுங் கடவுளோன் றன்மையின் வடநீழல்
வழிபடு வோரெலாம் வடதிசை முகமுற
வழிபடுங் கடவுளாய் வதிந்தவ னங்ஙனம்
வழிபடக் கந்தனை மதித்தவ ணிருத்தலும். (ககரு)

என்றுமத் தாணிபா லினிதுவீற் றிருக்குமக்
குன்றிடைப் பலரொடுங் கொம்மெனத் தோன்றுபு
மன்றலங் கொன்றையான் வதிந்தவர் சூழலில்
தென்றிசை யெல்லையைச் சேர்ந்தெதிர் வைகினன். (ககசு)

எதிருறுங் குமரனை யிருந்தவி சேற்றியங்
கதிர்கழல் வந்தனை பதனொடுந் தாழ்வயின்
சதுர்பட வைகுபு தாவரும் பிரணவ
முதுபொருட் செறிவெலா மொழிதரக் கேட்டனன். ()

தனக்குத்தா னேமக னாகிய தத்துவன்
தனக்குத்தா னேபொரு டாவருங் குருவுமாய்த்
தனக்குத்தா னேயருட் டத்துவங் கேட்டலும்
தனக்குத்தா னிகரினன் றழங்கிநின் றாடினன். (ககஅ)

சாருமெவ் வுயிருந் தன்வய மாக்கித்
தளர்க்குமா ணவப்பகை யோடும்
சூரனை முதலாந் துளக்கரும் பகையுந்
துலங்குமிப் பிரணவப் பொருளாம்
வீரனி லின்றே விளிந்ததென் றுளத்து
விரைந்தெழும் வீரத்தின் குறிப்பின்
ஆரமர் முடியோ னார்த்தலி னைய
தவ்விடம் வீராட்ட காசம். (கககூ)

மரணமும் பிறப்புங் கடந்தபே ரின்பம்
வழங்குமப் பெரும்பெய ரிறைக்குப்
பிரணவப் பொருளைக் கொடுத்தநா ளனைத்தாற்
பிரணவ வருத்தநன் னகராம்
இரணவல் லவுணக் கிளையெலா முருக்க
விலங்கருட் டிருவுருத் தாங்கி
அரணமா யமரர்ப் புரப்பவ னென்று
மமர்ந்தரு டணிகைமா நகரம். (கஉ0)

பணிகிளை ராரப் பண்ணவன் முருகற்
படர்ந்தருந் தவத்தினை யாங்குக்
கணிகமே புரிந்து கருத்துமுற் றுறலாற்
கணிகவெற் பெனப்பெயர் விளங்கும்
துணிகதி ரிமைக்கு நவமணி யடுக்கஞ்
சூழ்ந்தவச் சிலம்புமற் றின்றும்
அணிகிளர் தவங்க ளாதியோர் கணிக
மாற்றினு மரும்பய னடைவார். (௧௨௧)

மூலமீ றிகந்து மூலமே யில்லா
மூலகா ரணப்பொரு டனக்கு
மூலமா யிருந்து நால்வகைப் பொருட்கு
மூலமா கியவரு மறையின்
மூலவான் மொழிக்குப் பொருட்செறி வெவர்க்கு
மூலமா னவன்விரித் தமையான்
மூலவே தண்ட மெனப்படுங் குறவர்
மூலந்தே ரருவரைப் பறம்பு. (௧௨௨)

ஒருகையி லக்க மணிவட மொன்றி
லொளிர்மணிக் கமண்டல மற்றை
இருகர மபய வரதமா யங்க
ணிருந்ததே சிகனையன் றுடங்கு
மருவினர் போற்றி நால்வகைப் பொருளு
மல்கலி னானுமப் பெயர்த்தாம்
பொருவிலச் சயில மின்றுநாற் பொருளின்
புணர்ச்சிக்கு மூலமாய்ப் பொலியும். (௧௨௩)

உருவினெஞ் ஞான்று மிளமையிற் றளரா
வுத்தம னிறைமையெண் குணத்துப்
பொருளினெஞ் ஞான்று முதுமையிற் றளராப்
பொலிவுகண் டிமையவர் திருமால்
தருநிழ லரசன் மாதவ ரெல்லாஞ்
சாமிநா தப்பெயர் கிளந்து
மருவிய மகிழ்ச்சி திளைத்தன ரப்பேர்
வழங்குமா லன்றுதொட் டென்றும். (௧௨௪)

ஆர்த்துநின் றாடும் வீராட்ட காசத்
தடிகள்பின் பாருயிர் புரப்பான்
சீர்த்தமெய் யுருவே சிவலிங்க வுருவாய்த்
திகழவீற் றிருந்தனன் மாதோ

விர்த்தசெஞ் சடைதாழ் திருவடை யாளம்
வயங்குமச் சிவலிங்க வடிவைப்
பார்த்தவர் பணிந்தோர் பழிச்சின ரெய்தும்
பயனெவர் பகர்தரற் பாலார். (கஉரு)

அத்தகு வரைப்பின் விராட்ட காசத்
தடிகளா சான்வழி பாட்டிற்
கொத்தநற் றீர்த்த மகழ்ந்துவார் சடிலத்
தொண்புனல் பாய்த்தினர் நிறைத்து
வைத்தன ரதனுற் சிவகங்கை நாமம்
வழங்குமத் திருத்தநீர் படிந்தோர்
பொத்துநோய் தீரா தனவெலாந் தீர்ந்து
போகமும் வீடுமெய் துவரால். (கஉசு)

அன்றுடங் கணைந்தோர் படிந்துவேற் கரத்தா
சானொடு விராட்ட காசத்
தொன்றுநா யகனைப் பணிந்தெவற் றானு
மொழிப்பரு முடனுயிர்ப் பிணிகள்
மென்றநந் தென்றுட் வரங்கள்பெற் றுய்ந்தார்
மதித்துறி னளவினிற் படாரால்
பின்றையு மதிற்றோய்ந் திற்றைநாள் காறும்
பெரும்பிணி யிரித்தவர் மாதே. (கஉஎ)

உட்டுகண் முழுதும் பரிந்துமெய்ப் பொருளி
னொருக்கிய வறிவினர் தழங்கி
நட்டநின் றியற்றும் விராட்ட காச
நாதனார் சிறப்பெடுத் துரைத்தாம்
சட்டமூ வுலகும் போற்றவீற் றிருக்குஞ்
சாமிநா தனுமகிழ் சிறந்தாங்
கொட்டுரு வுடையோ னருட்குறி நிறுவி
யியற்றுபூ சனைத்திறங் கிளப்பாம். (கஉஅ)

விராட்டகாசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — ருசுசு.

---

# குமாரேசப் படலம்

---

யாவருக்கு மெப்பொருட்கு மின்பமெய்த நின்றவர்
மூவருக்கு மின்புறுத்து மூவிருதி றத்தரும்
தாவிலின்ப மெய்தநின்ற தத்துவத்த னென்பவால்
ஓவிலின்ப வுருவமான வொளிர்குமார விசனை. (௧)

காய மல்கமர ராண்மைதபு காரி யுதரம்
போயி ருந்துபுற னேகுபுக ரென்ன முகிறேய்
வேயி னின்றமணி விண்டுவெளி வந்து திவளும்
மீயு யர்ந்தகணி காசலவி சாக னொருநாள். (௨)

கான ரும்பியக டுக்கையுமெ ருக்கு மலையா
வான வர்க்கரிய நாடகந விற்று வரதன்
ஞான சத்தியினை நல்கியகு றித்த விழைவின்
ஆன பத்திமைய கத்தெழவ ருச்ச னைசெய்வான். (௩)

வயிர விட்டிக ளிரைத்தொழுக வைத்த துபொரப்
பயில்செ ழுங்கதிர் கொழுந்துகொடு பம்பி நிமிரும்
கபிலை வெற்பினமர் கங்கையைவ ரக்க ருதினன்
வியனெ டுங்கிரி யடிக்கணெதிர் மேய ததுவே. (௪)

வெள்ளி யங்கிரியின் மீதமர்தி ருத்த மணிகள்
தெள்ளொ ளிக்கதிர்பி லிற்றுகளி கச்சி லையடி-
நள்ளு கின்றதுந லத்தகப்பி லைக்கி றைதொழூஉம்
வள்ளல் வெற்பெனம திக்கடிவ ளாக்க நிகரும். (௫)

பன்ம ணித்திரள்கொ ழித்துமலர் பம்பி யினவண்
டன்ன நேமியும கன்றிலும ணிந்தொ ளிர்தலான்
மன்ன டுக்கன்மகள் வன்கடித டத்த ணிதரும்
மின்ன லங்குமணி மேகலைவி ழைந்த ததுவே. (௬)

தூவி வெள்குருகு தோற்றுகுர னூபு ரமொடன
மேவ வாளைநெடு மீனம்வெடி போய்வி ழுவன
காவி நேர்விழிய கூத்தியர்க தித்த சதியில்
தாவி யந்தரம றிந்துவரு தன்மை புரையும். (௧௪)

பெருகிய வித்தகு வளத்திற் பெட்புறீஇக்
கருவினை தபுங்கயி லாய கங்கையை
வருகென வழைத்தவன் மறுவின் மாயையின்
பொருவில்பல் பொருள்களும் பூத்திட் டானரோ. (௧௫)

இலக்கண முழுதமை யிலிங்கம் வேதிகை
அலக்கணந் தித்தவர் விழையு மாலயம்
மலக்கணம் விடைகொண்மண் டபங்கள் கோபுர
நலக்கண மணிகொடு நவம தாக்கினன். (௧௬)

பித்திகை யெங்கணும் பெருகு மான்மதம்
மெத்திய சந்தன விழுது கொட்டுபு
பைத்தெழு விரைப்புகை பாய்த்தி யோசனை
பொத்திய மணங்குலாம் பொற்பி யற்றினன். (௧௭)

தூண்டொறும் வாருறை சேர்த்தித் தூங்குகாய்
மாண்டமென் கதலிவார் கரும்பு பூகதம்
ஆண்டுறுத் தும்பரி னவிர்பொற் பட்டினல்
காண்டகு விதானங்கள் கற்பித் திட்டனன். (௧௮)

ஆடகத் தகடுக ளடுத்த கீழ்நிலம்
பாடமை மணித்துகட் பசும்பொற் சுண்ணநீர்
நாடரு விரைகலந் தொழுக்கி நன்மணி
தோடவிழ் மலரறு கரிசி தூவினன். (௧௯)

பொன்னரி மாலையும் போதிற் றொங்கலும்
மின்னகு பன்மணி விராய கோவையும்
துன்னிய கனிகளுந் துலங்கு மாடியும்
மன்னவு மணிபெற வெங்குந் தூக்கினன். (௨௦)

தோரண மெங்கணுந் தொடரிப் பல்கொடி
காரண விசும்பெலாங் கஞற்றிப் பாலிகை
பூரண கும்பங்கள் பொலிந்த வேதிகை
ஏரண வியவிளக் கினமு மீட்டினன். (உக)

வட்டகை வலம்புரி வளைபொற் பாசனம்
கொட்டொலிப் படலிகை கொடிப கஞ்சம்
இட்டைசைப் பனவெழி லாடி யாதியா
முட்டற யாவையு முறையு பிர்த்தனன். (உஉ)

எண்ணெயா மலகமா மஞ்சள் பாறபிர்
தண்ணெனத்தேன் வேழத்தின் றாறங் கைந்தென
நண்ணமிர் திரதங்க ளொளி கேரநீர்
அண்ணலங் கனிபரு விரைய மார்த்தினன். (உங)

தேசவிர் கலைகளுந் தெய்வ மாலையும்
பூசமை சாந்தமும் புகையுஞ் சுண்ணமும்
காசவிர் கலன்களுங் கனிந்த பல்சுவை
நேசமல் கமிர்தமு நிரைத்திட் டானரோ. (உச)

சூருயிர் குடிப்பவன் சுத்த மாயையின்
ஆரவிவ் வகையெலா மமைத்த பின்மணி
வீரரு மிலக்கரும் விழுமம் வீழ்த்துயர்
பாரிடக் கலவைநப் பரிப்ப வேவினன். (உரு)

[illegible] மலர்களுங் [illegible]
[illegible] மணிகொழிக்குந் திருத்த [illegible]
[illegible]
[illegible] தாங்கினான். (உசு)

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ()

தானிருக்குந் திருவெல்லை தனக்குவட கீழ்ஞாங்கர்
ஆனிருக்கை கொளவாவச் சகாயனையன் பொடுமிருத்தி
வானிருக்கு மளப்பரிய வழிபாடு புரிந்தருவித்
தேனிருக்கு மலர்க்கடப்பந் தெரியலான் மகிழ்வித்தான். (உ௮)

பிணிகிழங்கி னொடும்பெயர்த்துப் பெயராத நிலையருளும்
கணிகைவரை யடிச்சாரற் கபிலாய கங்கைமுகந்
தணிகிளர்பன் னிறைநிரப்பி யல்லனவும் பலர்புரியத்
தணிவிறன திருக்கைவட சாரமைத்த வாலயத்துள். (உ௯)

கருவிகளு மறியாமை கதுவவரு கேவலமும்
ஒருவியெழு பரஞானத் துளச்செயலைத் தபத்தோற்றும்
பெருகுபர மானந்தப் பெருநிலைமைப் பொருளேயாம்
முருகனருட் குறிப்பதிட்டை முறையியற்றிப் பூசிப்பான். (௩௦)

குருமணியி னொளிப்பிழம்பு கொழுந்தோடிப் பல்கணியாப்
மருவுகத வெனத்தோற்று மணிவாயி லிருபுடையும்
பொருவில்பர மபரமெனப் புகன்ஞான மிரண்டனையும்
அருணிலையுந் திருவெழுத்தி னருச்சனைசெய் தமைத்திட்டான்.

பூதமுதற் கரணமெலாம் புறமாக வகம்புறமற்
றுதரவி னிடைமூழ்கி யமைத்தபொரு ளவையனைத்தும்
வேதமுடி கடந்தொளிரும் விழுப்பொருளி னிறைவாக்கித்
தீதணுக்கு மஞ்செழுத்துஞ் செயிர்விரவா முறைமாறி. (௩௨)

பாதமுக முடிக்குதவு பாத்தியமா திகளெல்லாம்
பேதமறு மருள்கடந்த பேரெழுத்தி னினிதமைத்தங்
காதனமு மூர்த்தியுமூ லமுமங்கத் திருவெழுத்தால்
ஏதமற வுயிரெல்லா மிணர்மலர்கொண் டருச்சித்தான். (௩௩)

அளியாகி யொளியாகி வெளியாகி யளவாகுங்
களியாத பொருட்கலப்பிற் கதித்தசுகந் தப்புறமாய்
விளியாத சுகம்பெருக்கி விளங்குதிரு வுருக்குளிர்ப்பத்
தெளியாமுந் கபிலமுதற் செறிவனைத்து மாட்டினான். (௩௪)

விழைதருமென் கலிங்கத்தான் மெய்ப்போர்ந் தப்புலர்த்திக்
கழைபொலிநாண் கோவணம்விற் றைகதிர்ப்பூம் பட்டணிந்து
குழைகலவைச் சேறெங்குங் கொட்டிமணத் துகளட்டி
மழைதவழ்வ தெனவிரைகண் மடுத்தபுகை தவழ்வித்தான். ()

குண்டலமுங் கதிர்த்தோடுங் குருக்கிளர்பொன் மணிமுடியுங்
கண்டசர மங்கதமுங் காழ்பணியு மலர்த்தொடையும்
வண்டொடைப்பு மோதிரமு மொளிருதர பந்தனமுந்
தண்டைதா னூபுரமு மற்றுமெடுத் தலங்கரித்தான். (௫௬)

பாறப்பர்நெய்ப் புனிகந்து பயறுசருக் கரைதிலகம்
வேறுவிர விபவல்சி வெற்றன்னங் குய்க்கருனை
ஊறுசுவைச் சிற்றுண்டி பொன்வறைபல் கனிபுனலும்
தேறுமனு மொழிந்தமுது செய்தருள மகிழ்சிறந்தான். (௫௭)

பூசுபுனல் கரத்தேந்திப் பாத்தியமா
சமனமருக் கியம்பூ ரித்து
வாசமலி பாகடையின் சுருணீட்டி
மணித்தூபந் தீபம் வட்டித்
தாசறுபஃ றீபவா ராதனையும்
புரிந்தாடி யாதி யுய்த்து
நேசமலி புகழ்பரப்பி வலம்வந்து
நிலத்திறைஞ்சி நின்று ணங்கு. (௫௮)

வாளாங்கு வைகுறினுந் தாமேவந்
தருள்புரியும் வாய்மை மைந்தன்
தாளாண்மைத் தலைநின்ற வழிபாட்டிற்
றரிப்பரே தனயன் காண
வேளாண்மை வித்தகனு ரவணாணிந்த
வணிமுழுதும் விளங்க விண்ணோர்
நாளார்ந்த மலர்தூவக் கணநெருங்க
நயந்தெதிரே நண்ணி னரால். (௫௯)

மறுவனும்வீழ்ந் தெழுந்துநின்ற திருமகனை
முகநோக்கி வரமே தென்றார்
முறுவனில வெழக்கனிவாய் முகிழ்விரித்து
முடித்தலைவிண் ணவர்மே லென்றும்
கொறுகொறுக்கு மவுணருயிர் குடித்திடுநல்
ஞானசத்தி கொடுப்ப தென்றான்
அறுகுமலி சடைமுடியா ரதனொடுபல்
வரமளித்தவ் விலிங்கத் தானார். (சல)

இருளனுக்கி யொளிபெருக்கு மவ்விலிங்கம்
குமாரலிங்க மெனும்பேர் பூணும்
மருளிரிக்கு ஞானசத்தி தரித்தலினாற்
கணிகவரை வாழ்க்கை பூண்ட
தருநிகர்த்த குரிசிலுக்கு ஞானசத்தி
தரனென்னச் சாற்று நாமம்
பொருண்மிகுத்த பலபெயரின் மிக்கபெப
ராயங்குப் பொலிந்த தன்றே. (சக)

வெள்ளிவரை யிருத்தலினாற் கயிலாய
கங்கையென விளங்குந் தீர்த்தம்
தெள்ளுபுகழ்க் கணிகவரைக் குமரனதைத்
தாடிமகிழ் திளைத்து முக்கண்
வள்ளனுக்கு மாட்டுதலாற் குமாரதீர்த்
தப்பெயரின் வயங்கு மப்பேர்
உள்ளினவ் ரெழுபவத்திற் காதரமு
மெழுந்திரிய வுருக்கு மாலோ. (சஉ)

கும்பமதி வருமகத்திற் குமரவே
ளினிதாடிக் குழகற் காட்டும்
வம்பவிழ்பூங் கயிலாய கங்கையிடை
யம்மதியின் மகத்திற் சென்று
கம்பமறப் படிந்தாடிக் குமாரலிங்கந்
தொழுவோர்கள் கரிசி னீங்கி
உம்பருக்கு மறிவரிய சிவலோகத்
தெஞ்ஞான்று முறுவர் மாதோ. (சங)

எத்தினத்தா யினுமொருகான் முழுகினரெப்
பிணியுமெழு காத மோப்பிப்
புத்தியறி வாயுள்சுசி புகழ்சூழ்ச்சி
வீரம்வலி பொருண்மேம் பாடு
மித்திரர்புத் திரர்மனைவி முதலான
வெறுக்கையெலா மேவி யீற்றில்
கொத்தினெடுங் கந்தலோ கத்தையவ
னுருக்கொண்டு குறுகி வாழ்வார். (சச)

செங்கமல மலரேய்க்கு மொருதிருக்கை
குறங்கமைத்துச் செம்பொன் மேருத்
துங்கவரிச் சிலைக்கடவு ளருண்ஞான
சத்தியொரு தொடிக்கை யேந்திப்
பொங்குமருட் கருணைவிழிக் கடையொழுக
மலர்ந்தமுகப் பொலிவி னேடும்
அங்கணமர் ஞானசத்தி தரனையகத்
துறநினைப்போ ரவனே யாவர். (சரு)

ஐம்பொறியின் வழியொழுகா தவற்றைவியங்
கொண்டறிவின் மயமே யாக்கிக்
கொம்பனையா ளிடத்தரனை வழிபாட்டி
னினிதேத்துங் கொள்கை மிக்கீர்
பம்புகதிர் மதிமோலிப் பரமர்மகிழ்
குமாரலிங்கப் பரிசு சொற்றும்
வம்பவிழ்பூ வணைக்கிழவன் மாதவஞ்செய்
தருள்பெற்ற மரபுஞ் சொல்வாம். (சசு)

குமாரேசப் படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — சகரு.

## பிரமன் சிருட்டிபெறு படலம்

---

ஒன்ருகிப் பலவாகி யுருவாகி யருவாகி
அன்ருகி யாருயிர்கட் காருயிராய் நிறைந்தானும்
பின்ருழுஞ் சடையானும் பிறங்குநுதல் விழியானும்
வென்ருலும் விடையானும் விருத்தபுரி வித்தகனே. (க)

முரனுஞ் சிறைவன் டினமொய்த் துளரும்
அரவிந் தமமர்ந் தவனு றுமுகன்
விரவுஞ் சிறைவிட் டபின்வின் னுயர்தன்
பரவும் பதிசென் றுபதிந் தனனுல். (உ)

காரா கிருகங் கழிவுற் றபினும்
ஆரா வமுதா யவருட் பரமன்
சீரா ரருளாற் செய்சிருட் டிசெய
வாரா மையினே கைமனத் திலனே. (ந)

அந்தோ விதுநாஞ் செயலாம் வழிமற்
றெந்தோ வெனவெண் ணியசூழ்ச் சியினன்
முந்தா ரணமுந் தெரியா முதல்வன்
தந்தா னவனே தரவல் லவனே. (ச)

தலைவன் சரணஞ் சரணம் புகினம்
உலமந் தபவத் துயரோ டுமிவண்
அலமந் தவருந் துயருந் தவிர
நிலவுந் தொழிலென் றுநினைந் தனனே. (ரு)

உத்தா லகவா ரணியப் பெயருற்
றித்தா ரணிபோற் றவிருந் தபதி
வித்தா ணவமாய்க் கும்விழுத் தவரோ
டத்தா னமகன் றடைவுற் றனனே. (சு)

கரந்து வைகினுங் கற்றவர் தம்புகழ்
நிரந்து தோற்றப் படுவது நேர்மனுள்
பரந்த வேர்ப்பல வின்பழம் யாவர்க்கும்
சுரந்த வாசத்திற் றேற்றுமோர் பாலெல்லாம். (எ)

உறும்ப லாயிர வண்டமு டம்பெலாம்
பெறும்ப ராபரன் பெற்றிகி கர்ப்புற
நறும்ப லாயிர நன்கனி தூங்கிய
குறும்ப லாவின் குழாமொரு பாலெல்லாம். (அ)

ஆண வப்பிணி நீங்கவ ரும்பயன்
மாண நல்கரன் மானமந் திக்குலம்
காணு மென்கறி யைக்கறித் தாழ்பறழ்க்
கூணி ருங்கனி யூட்டுமொர் பாலெல்லாம். (கூ)

அருவி தொட்டவ றைக்குழி மாத்தன
கருவி முந்திரி கைப்பழ மீந்தினம்
உருவ வின்மது வோடுகக் கேடின்றிப்
பருவ மன்றிப்ப யப்பவொர் பாலெல்லாம். (க0)

கால மன்றியுங் குற்றுக்க டவுளர்
பால லிப்பப் படர்தவத் தாலலி
மேல டாதன போல்விரைச் சண்பகர்
சோல வின்னைந்து பூாறுமோர் பாலெல்லாம். (கக)

சுனைம லர்க்கணந் துற்றுவ வென்றுதேன்
இனைய வாளையி டித்திறை கொள்வபோற்
துணைய வும்பர்த்தொ டுத்தவி ருல்கிழீஇ
நணைபு குக்குந லத்ததொர் பாலெல்லாம். (கஉ)

வண்டு போய்மலர்க் காந்தளின் மூசுதல்
கண்ட ழற்குட்க விழ்ந்தன வென்றுநீர்
நொண்டு நண்டுளி தூஉய்ப்பெயர்த் தோகையுட்
கொண்டு மந்திகு னிக்குமோர் பாலெல்லாம். (கங)

இனிய செய்கையர் யாங்குள ரோவெனத்
துனியில் கேள்வியர் சூழ்ந்தனர் நேடல்போற்
புனித மென்கிழங் காதி புரைகிளை இத்
தனிவில் வேடர்ச ரிப்பதொர் பாலெலாம். (௧௪)

தூர்சு மின்கல னும்விரை யுந்துதை
வேசி மாதரின் வேழக்க தலியில்
பூசல் வேழம் புணர்ந்துவி டுந்திறம்
ஆசு மில்பயம் பார்ந்ததொர் பாலெலாம். (௧௫)

வீங்கு தோட்குடை வேய்வியங் கோளூற்றி
ஆங்க ணிற்பத மரவ ணங்கனூர்
தாங்கு தீம்புனஞ் சார்புட்கு லந்தப
ஓங்கு முத்தெழ வூழ்க்குமொர் பாலெலாம். (௧௬)

மென்மை யாரிடம் வாய்த்துமி குத்துறின்
வன்மை யார்வலி மாய்ப்பது காட்டுமென்
றன்மை யாரரு வித்திரள் சான்றகல்
புன்மை யாகப்பொ ளிந்தொரு பாலெலாம். (௧௭)

கெழுமு பாவங்கிட் டாதுபெ யர்ப்பபோல்
விழும வெள்ளரு வித்திரள் வீழ்வன
இழுமெ னோதையு மந்தரத் தின்னியம்
குழுமு போதையுங் கூர்க்குமொர் பாலெலாம். (௧௮)

அரம்பு செய்பிணி தீர்வெறி யாட்டயர்
வரம்பிற் றொண்டக வங்கிய வோதையும்
நரம்பி னேழிசை நாவியற் பாடலும்
சுரம்பொற் கென்னத்து தையுமொர் பாலெலாம். (௧௯)

அற்ப கத்திமை யாரண்மிச் சிந்திய
கற்ப கக்கடிப் போதுங் கலன்களும்
பொற்ப கப்பொழில் கைசெய்தெ னப்பொலி
வெற்ப கத்துவி ளங்குமொர் பாலெலாம். (௨0)

தென்றல் சந்தனஞ் செந்தமி ழென்றிவை
நன்ற ளிப்பந றும்பொதி யந்தழீஇ
நின்ற தாங்கொரு பாலென நீண்டவக்
குன்றெ லாமவை கூர்ந்தன மிக்கரோ. (உக)

இருபு டைக்கணி ருபெருந் தேவரும்
மருவ நாப்பண்ம தலையிற் றுங்கிய
ஒருபெ ரும்பெ ருத்தமன் போன்மெனப்
பொருவின் முத்தலை பூத்ததக் குன்றமே. (உஉ)

இச்சை ஞானந்தொ ழிலிவை மூன்றனோ
டச்ச னின்றனைத் தும்விளைத் தாலென
முச்சி ரத்தொடு நின்றுமு றைமுறை
பொச்ச மில்வளம் பூப்பதக் குன்றமே. (உங)

முத்தொ ழிற்குரி யாரொரு மூவரும்
எய்த்து றுமைபி னிதுறத் தாங்கியோர்
கத்த னுண்டெனக் காட்டுமா தாரமாய்
அத்தி ரிக்குவ டேந்தும டுக்கலே. (உச)

மூன்று மெய்ப்பொருண் மூன்றுமொற் றித்தலிற்
றோன்று மொன்றென வென்றது ணிப்பபோன்
மூன்றெ னச்சிக ரம்முகிழ்த் தொன்றெனத்
தோன்ற நிற்குமு லத்தினத் தொல்வரை. (உரு)

ஈண்டுப் போந்தவ ரிம்மைம றுமையும்
மீண்டு றுதமெய் வீடுமு றுபவென்
றூண்டுத் தானரு ளும்பயன் காட்டலும்
மாண்ட தான்முப்ப ரிந்தலை யோங்கலே. (உசா)

மூவர் மும்மறை மூவகை யாருயிர்
மூவ கைச்சுடர் மூவுல குந்தொழும்
மூவ ருந்தலை வன்னுரு மூவகைத்
தாவ துந்தெரிக் கும்மவ்வி லங்கலே. (உஎ)

இலைமு கப்பசும் பூண்களி டையிடைத்
தலைய மைத்தத ணிவரை மார்பகம்
நிலையு மாரநி கர்த்திடும் பல்சுனை
உலைய வீழ்ந்திழிந் தாருமரு வியே. (உஅ)

ஆங்கு நாதன ருண்ட மாடுதம்
ஓங்கு மப்பதி யொண்மைவ ளத்தினுக்
கியாங்கு மொப்பிலை யென்றும தித்துளம்
தாங்கு மின்பத்த ருக்கெனத் தக்கதே. (உகூ)

அனாதி யாகிய வண்ணல மர்ந்தவத்
தெனாதுத் தாலகத் தேத்தினை யன்மினன்
மனாதி மம்மர்த்த ணந்தும கிழ்கொள
இனாத தீர்க்குமி ருந்தவ மாற்றினன். (௩௦)

வருவைகலின் வாராதெழு வாமான்மணி பிரதத்
தொருசெங்கதி ரமரன்றண வுறினும்வர வொழியா
அருவிப்புனன் முக்காலமு மாடிப்பொடி பூசித்
திருமல்கிய வருள்கண்மணி சிரமாதியி னணியா. (௩௧)

குழகன்றிரு வுருவாங்குறும் பலவுங்குழ கன்மெய்ப்
நிழல்செய்தமர் குற்றாலமு நிமலந்தரு மிறைவன்
அழகொன்றிய சபையுந்தொழு தன்பாலநற் சனையுட்
தமையர்சிவ லிங்கத்திலி பற்றித்தவ முறுநாள். (௩௨)

வட்டச்சடை யத்தாணியின் மலர்மெல்லணை மேலால்
அட்டித்தழ லரவங்குடை யாகக்குளிர் மதியம்
விட்டுக்கதிர் விரியப்பயில் வீறப்பக்கருள் விமலன்
மொட்டிக்குவி முலைமாதுடன் முன்னேயெதிர் நின்றான். (௩௩)

கண்டானுடல் கவலைக்கட லழக்கா தெழுந்தான்
தண்டாமரை நண்டாதுத யங்குந்தட மார்பம்
மண்டான்படி யத்தன்னடை மலர்மெல்லடி வீழ்ந்தான்
கொண்டான்வல னெதிர்நின்றுகை குவியத்துதி புகல்வான். ()

எண்ணுதிகழ் தக்கன்மகம் பற்றக்குழூ முற்ற
விண்ணோருடல் சிதறுந்தனி வீரன்றனைப் பகலி
மண்ணாழ்தர விழிகங்கைம டுத்துத்திறல் சிந்தூர்
தண்ணார்மதி மிலைசெஞ்சடைக் தந்தாயடி போற்றி. (௩௫)

கழைவார்சிலை குழையக்கடி மலர்வாளிக ளிமிர
விழைபோர்புரி மதவேளுரு விளியக்கழல் வெந்தீ
உழைநேர்விழி யுமையாள்கர மொளிர்கண்ணிணை கதுவக்
தழைபேரிரு ளிரிகண்ணுமிழ் தலைவாவடி போற்றி. (௩௬)

இன்னாற்கட னடுவட்படி யெளிமேமுறை கேளா
மன்னிக்கிள ரின்பக்கடல் வதிவித்தருள் செவியை
மின்னிக்கிளர் வன்னித்தலை வெதிர்பட்டுற வுலகம்
முன்னிக்கிள ருழைவாய்க்கரன் முதல்வாவடி போற்றி. (௩௭)

அழல்போலுயிர் முழுதுஞ்சுடு மனுராணவ மொருவக்
குழல்வாய்மொழி யுமைகாணமு கிழ்க்குங்குறு நகையால்
உழலாவுல கொருமூன்றினு முறையும்புர மூன்றும்
தழல்வாய்விழ மறநல்கிய தந்தாயடி போற்றி. (௩௮)

மருளாதுனை யறியம்வகை மாலாதியெல் லேமும்
ஒருவாதுணர் மறையாகம முதவுந்திரு வாயால்
செருளாதுல கேழும்பொடி செய்யும்வளை யாளி
வெருளார்தர வுயிருண்டருள் விமலாவடி போற்றி. (௩௯)

இரந்தாருல கோரேழினு மிவரேபிறை யென்ன
வரந்தானனி யெளிவந்துவ ழங்குங்கர மலரின்
உரந்தாவிய வளிமேன்சிர மொன்றொப்பென வாங்கிப்
புரந்தானுடல் சூலத்திடு புனிதாவடி போற்றி. (௪0)

முத்திப்பத மொருமூன்றொடு முழுதுந்தழ திரதம்
செத்துப்பணி யடியார்சிரஞ் சேர்த்தின்பருள் பாதத்
தெத்திக்கினும் விரையாக்கலி பிலர்வித்தம ரிபமன்
மைத்துத்திணி யுடல்பொன்றிய வரதாவடி போற்றி. (௪௧)

அருள்செய்வன புரிதண்டமு மருளேயெனு முண்மைத்
தெருளொன்றுமு ளத்தானருள் செயவந்தருண் முருகன்
வெருளொன்றிய புரிதண்டமு மருளாகிய மெய்ம்மைப்
பொருளொன்றிய வயனின்னன புகலுந்துதி கேளா. (சஉ)

எற்றுக்கிவ னுற்றுத்தவ மினிதாற்றினை யென்னுக்
கற்றைச்சடை முடியான்கரு ணையினோடருள் செயலும்
வற்றிக்கவி னழிமேனியன் மழைகண்டெழு மயிலின்
முற்றக்கிள ருவகைக்கடன் முழுகுற்றெதிர் மொழிவான். (சங)

தவற்றிற்கதி நடைகண்டுத ருக்குக்கடன் முழுதும்
சுவற்றிக்கொடு நரகுந்துணை யாகாவிட ரேய்த்துக்
கவற்றிச்சிறை யிடுவித்தருள் கந்தப்பெரு மான்செய்
இவற்றுத்தொழில் யான்செய்கதி லென்றானெதிர் நின்றான். ()

அற்றேனின தார்வங்கம ழலரோயிது கேண்மோ
செற்றார்படை செற்றித்தெறு ஞாட்பிற்றிர ணைக்கிப்
பற்றாதென மற்றைப்படை பணிசெய்திட நிற்கும்
முற்றாரழல் வேலானல தாளன்முடி யாதால். (சரு)

துறைமுற்றிய மறையாகம மங்கந்தொகு கலைகள்
இறைமுற்றிய விறையோனுல கெல்லாம்பணி குரவன்
நறைமுற்றிய விதழித்தொடை நாமுந்தொழு மாசான்
பொறைமுற்றிய வவன்வார்கழல் புகலேபுக லாமே. (சசு)

எய்யாந்தவ முடையார்க்கரு ளியுந்திற நோற்பின்
கையாந்தவ றொருவிக்களி யருள்வாங்கழல் போற்றி
மெய்யாந்தவ முழந்தாய்பிழை வித்தாய்நம தருளால்
மையாந்தநின் விழைவுய்த்தருள் வான்பாலுறல் பெற்றாய். ()

இனியன்னவ னருளுக்கொரு வைப்பாயில குவையால்
துனிவின்றுயர் தவமாற்றிய சூழென்றனன் கேட்டான்
புனிதன்முக மெதிர்நோக்குபு புலவர்க்கமிழ் தன்னான்
நனிவந்தெளி தருளுந்தல நவிலாயென நவில்வான். (சஅ)

அண்டர் போற்று மடுக்கனோர்
கண்டு தாழ்ந்து கசிந்தனன்
பண்டை வேதம் பழிச்சினன்
மண்டு கட்புனல் வாக்கினன். (ருசு)

ஆண்டி லிங்க மமைத்தனன்
மாண்ட பூசை வயக்கினன்
பூண்ட வேடப் பொலிவொடு
மூண்ட ருந்தவ முற்றினன். (ருஎ)

முதுமை மாதவர் மூசுதேன்
மதுவி ராந்தொடை வானவர்
பதும னேடு படர்ந்துசெல்
நுதுபு லத்தரு நோற்றனர். (ருஅ)

விருத்த ராகிய மெய்த்தவர்
விருத்தந் தீர்தர மேவுமவ்
விருத்த வானகர் மேயதால்
விருத்த மாபுர மெய்ப்பெயர். (ருகூ)

பொற்ற மாதவம் போற்றியே
ஒற்றை யாண்டொழி வெய்தலும்
பெற்று வெற்பிவர் பெற்றிமை
உற்ற னன்னுயர் மால்வரை. (சுO)

நைகரமி லன்போடு நண்ணும் வேதன்
செய்கழற்காற் குமரனமைத் திருவுந் தீர்த்தம்
பொய்கடியும் விதியாற்றிற் புகுந்து தோய்ந்து
மெய்கதுவும் வினைமுழுதும் விழைந்து செய்தான். (சுக)

மட்டுவிரி பொழிற்குன்றம் வலம்வந் தேறிச்
சட்டவிடர் தபுமாவச் சகாயற் போற்றி
எட்டுருவாங் குமாரலிங்கத் திறைவன் பாதம்
அட்டுமது மலர்தூவி யஞ்சித் தானல். (சுஉ)

வானாதி பூதங்கள் வயக்கி மாற்றும்
ஆனாத பேரறிவா மடல்வே லண்ணல்
கானாரு மலர்ப்பாதங் கசிந்து தாழ்ந்தங்
கூனாதி பொருக்கியுணர் வபத்த னானான். (௩௩)

அன்றுபோய் வழிநாளங் கடுத்த கீழ்சார்
ஒன்றுநேர்ச் சுனைநோக்கி யதனிற் போய்ந்து
மன்றல்சூழ் சுனைத்தலைபின் வைகி நாளுட்
நன்றுமா தவமாற்று நடைமே தக்கான். (௩௪)

மறைகதித்த வாறெழுத்தின் வண்மை நாடி
முறைகணித்து முருகனருள் வடிவ முற்றப்
பொறைகதித்த வுளத்தமைத்துப் பொறிக ளோப்பி
நிறைகதித்த மாதவத்தி னிகழுங் காலை. (௩௫)

தன்னருளைப் பிழைப்பதே தண்டாச் செல்லல்
என்னுமது முன்றெரிக்க விறைவன் மீட்டும்
தன்னருளைப் பெறுவதே தக்க வின்பம்
என்னுமது தெரிப்பவாங் கெதிரே தோன்றும். (௩௬)

நலம்புரிந் தன்மி னோர்க ணண்ணிய வெம்மைப் போலக்
குலம்புரி தேவ தேவர் குநமணி முடிக டாழ
வலம்புரி முத்தம் போல வயங்குவ ரென்னு மாபோற்
சிலம்புகிண் கிணிகண் மற்றுஞ் சேவடித் துணையி னார்ப்ப. ()

வலத்தினர் கொள்ப வென்னு மரபினைத் தெரித்திட் டாங்கு
வலத்தனித் தாள்சேர் தாண்மை மாற்றலர் கழலு மாற்றல்
நலத்தகு கழலென் றேது நகைமணிக் கழல்கண் டோனாக்
கலத்தலென் றுணர்த்து மாபோற் கலகல கலவென் றார்ப்ப ()

வெங்கதிர் மணிகால் யாத்த போதலை யென்று நாங்கும்
அங்கியு மிவனை யென்ன வறியுமா மணமோ டின்று
செங்கதிர்ப் பட்டின் றேர்த்த திருவரை நாளு [illegible]
பொங்கொளிப் பட்டுடன் சுற்றும் புகர்மலை யென்றன் [illegible]. ()

மூவரு மங்கத் தோர்பான் முகிழ்க்குமா செய்யு மாண்மை
மூவரை காட்டு மார்ப மொய்வரை யருவி யன்ன
மாவிரை பொங்கும் பூந்தார் மணிவடம் பொற்று ரெல்லாம்
நாவலர்க் கடங்காப் பொற்பி னருகதிர் பிணைந்து துள்ள. (எ0)

பூமுத லைந்தற் கித்தல் புணர்த்தமை தெரிக்கு மாபோல்
தாமரை மலர்ந்து கற்பந் தளிர்த்துத்தே னுவின்கா தாகிக்
காமுற வலம்பு ரிந்து கதிர்மணி முகிழ்த்த செங்கை
நாமற வஞ்ச லென்னு வமைத்தரு ளயப்புந் தோன்ற. (எக)

ஆறிரு கோடி வெய்யோ ரனைவரு மொருங்கு கூடி
விறினும் பரிதி முன்னர் வெண்கதி ரெனமை யாக்கும்
பேறிருங் கிரணக் கற்றைப் பெருவிலைச் சிறுக லாழி
மாறிரி யடியா ருள்ள முழுவதும் வளைத்துக் கொள்ள. (எ௨)

பிரமர்நா ரணர்பல் லோரைப் பெற்றெடுத் தவர்க்கு நல்க
வரமலி பாச மாழி வகுத்துவைத் திருப்ப தேய்க்கும்
உரமலி முன்கைச் சூழ்ந்த வொளிர்ந்தபொற் றொடரி னோடு
கிரணவொண் கடக மெங்குங் கேழொளி மயமாத் தேக்க. ( )

வரையரோ தோளன் றென்னும் வயிரவங் கதங்கண் முன்கைப்
புரைதபு கடக மிக்குப் பொலிபிர தாபங் காட்ட
நிரைபிரா சதத்தின் மேலாய் நிகழுஞ்சாத் துவிகத் தாகும்
உரைதகு கீர்த்தி யும்ப நற்றொளிர் முறைமை காட்ட. (எச)

கடகமங் கதங்க ளோரே கதிரமதி மண்டி லத்தின்
சுடர்தர வும்ப ரங்கித் தொகுகதிர் மண்டி லஞ்செய்
படர்கதிர்க் குண்ட லங்கள் பரிதிபன் னிரண்டும் வேறு
தடவரை பெற்றொ ருங்கு சார்ந்தெழு காட்சி தோற்ற. (எரு)

மண்டிலம் பிறழா தோங்க வயங்கித ழாபி ரஞ்சூழ்
முண்டக மேனின் றன்ன முகமதித் திலக மாதோ
கொண்டருந் தவர்கள் யோகிற் குறிக்கொடன் னுருவங் காட்டக்
கண்டருங் கருணை வெள்ளந் ததித்தொழு கமிழ்திற் பாய. (எ௬)

இருவரா யிருந்து தான்வே றெனவவர் தமக்கு மேலாம்
ஒருவனே யென்ன வென்று மொளிர்மதி யாகி வேறாய்
இருசுடர் விழிக்கு மீப்பா லிலகெரி விழிகொ லென்னப்
பொருவில திலக மேலாற் பொழிகதிர்ப் பட்ட மின்ன. (எஎ)

குவிதரு மாறு தாரக் குருமலர் மலர்த்து மாறு
சவிமுகப் பரிதி காப்பட் டவிர்சிவ னுருவஞ் செங்கேழ்
அவிர்மணித் திலக மீக்க ணலங்கிய விதானம் பட்டம்
இவர்கதி ரிலம்ப கந்தோ ரணமென வெழின்மிக் கீட்ட. (எஅ)

உதரபந் தனவோ ராழி யொளியுரப் பலகைப் பல்கைப்
பிதிருறுப் பெறழ்த்தோட் சேக்கைப் பிணைமுகப் பரிதி பொற்
கதிர்மணிக் கிடுகு கூம்பு கவினிய மேற்போக் கென்ன [றேர்க்
முதிர்மணி தெரிந்து செய்த முயங்கொளி மோலி வாய்ப்ப. ()

அணிபரித் தொழுகி வார்ந்த வவிர்மணிச் செவிகள் சுற்றில்
பிணிபணி வடங்க நீக்கிப் பிறக்கிய தெனக்க வித்த
பணிமுடித் தேர்மேற் போக்கின் வார்கொடிக் குழாங்க ளாங்குத்
தணிவற வெழுந்து துள்ளுந் தன்கதிர்க் கொழுந்து காட்ட. ()

கருங்கடல் வரைப்பிற் செய்ய கதிரவ னெழுந்த தென்ன
ஒருங்கரத் தொகைக ணூறு மொண்சிறைக் கலாவ மஞ்ஞை
நெருங்குபல் வன்னப் புள்ளி நிகழ்வெரி தலையிற் றோற்றி
மருங்குபல் கணமுஞ் சூழ மலரவ னெதிரே சென்றான். (அக)

விண்ணவர் சொரிபூ மாரி மெய்ப்பொலி வினிமை யாக்கத்
தண்ணுமை பதலை தக்கை தகணிச்சங் குடமு ழாக்கள்
பண்ணிசை வீணை மற்றும் படர்செவிக் கினிமை யாக்க
உண்ணிறை தியான வேத னொளிர்விழி விடுத்துக் கண்டான்.

கதுமென வெழுந்து தன்னுட் கருதிய வுருவிற் றோற்றார்
விதுவணி பெருமான் மைந்தன் விரைமலர்ப் போது தாழ்ந்து
குதுகலம் பொங்கக் கண்கள் கோட்டமெய்ப் புழுது வெள்ளம்
முதுநில நனைப்பச் சூழ்ந்து முன்னின்று துதிகள் விண்டான்.

வானாதி பூத முதலான யாவும்
வருவித் தளித்தி யவைமற்
றூனாத வாவி தொழிலிற் கிளர்ப்ப
வடைவிற் புணர்த்தி யவையாய்
ஊனாதி யூனி னுயிராதி யெண்ணி
லுயிருக்கு ணின்ற வுணர்வும்
தானாதி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அச)

துதையத்து வாவும் வடிவென்ன மொய்த்தி
துகடீரு மைந்து மனுவும்
வதிவுற்றி யக்கு முடலிற் பணித்தி
வளரைந்தொ ழிற்கு முதலாய்க்
கதுவுற்ற வொன்ப துருவுங்க லத்தி
கழலாத காய மறிவாத்
ததைகிற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அரு)

கலைகற்றி லாமை யிளமைக்க ணிற்றி
கலைமுற்று ணர்த்து முதிய
நிலைமைக்க ணிற்றி நிகழ்வேத மங்க
முதலாக நீடு கலைகள்
மலைவற்று ணர்த்து பொருண்முற்று மாதி
யவையொன்று மன்றி வளர்மெய்த்
தலைநிற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அசு)

இழிவுற்ற டுத்த மலகேவ லத்தி
னிணர்வாய்ந்த லர்ந்த தருவின்
அழலொத்தி யாவி யுருவாதி யோடு
மணைவுற்ற போது சிலையின்
நிழலக்க திர்க்கு மனலொத்தி யன்ன
நிகழாத வீட்டி னயமார்
கழலொத்தி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அஎ)

இருளத்து லப்பி லுயிர்மூழ்கி நிற்ப
வியல்விச்ச தேது மிலதாக்
கருணைத்தி றத்தி னலகற்ற வாவி
கருவிப்ப டுத்தி கருவி
மருவுற்ற வற்று ளுயிர்சில்ல வாங்கி
மயரற்ற சுத்த நிலையில்
தருகிற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அஅ)

திளமாயை மோக வினைபிற்பி ணைந்த
செறியாவி யின்ப நிலையில்
வளையாவி டுப்ப வுருமூன்றெ டுத்தி
வழியூடு கைத்து நலனை
விளைபாவ ளித்தி வினைபொப்பு றுத்தி
வினைமாயை மூல மலநோய்த்
தளைவீழ்த்தி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (அகூ)

உயங்கப்பி ணிக்கும் வினையுங்க ரந்து
ளுடனுய்மு டித்தி யதனை
வயங்கத்தெ ரித்தி மறுகத்த கர்த்தி
வளராமை நூலின் முறையின்
இயங்கப்பு குத்தி பெரிகும்பி யூடு
மினைவித்தி தோய்த லிலையாய்த்
தயங்குற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (கூ0)

வழிநின்று நன்று புரிகால தன்றன்
வழிபோலு டற்று பயனும்
குழிநிற்ப வுய்த்தி கொடுமைத்தி றங்கள்
குயில்கால வற்றின் வழிபோற்
பழிபற்று ணர்த்து பயனுய்பு ணர்த்தி
பயனென்று ருத திறமும்
தழிநிற்றி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (கூக)

நாளூற்றெ ழுந்த மதிபோன்ம லங்க
ணலியத்து ரந்து வருதி
வாளூற்ற செய்ய சுடர்போல முற்று
மடியக்கி ளர்ந்து நிமிர்தி
ஆளத்த விர்ந்த திருமேனி தன்னை
யழலம்பி ழம்பி னறியத்
தாளுய்த்தி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (கூஉ)

பகைசெய்து நிற்கு முலகேது முள்ளம்
படராத வண்ண மொளியின்
மிகைசெய்தி ருத்தி யுடலூழெ னைத்தும்
விரவாமை யேற்று நுகரா
வகைசெய்து நிற்கு மறிவுங்கெ டுத்து
மறியாமை யின்ப நிலையில்
தகைசெய்தி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (கூங)

கலங்காத நின்மெய் யருளிற்பு காத
கலதிக்கு ணத்தி ழுதையேன்
விலங்கோடி ணைந்து மதியாத குற்றம்
விரவாமை யன்று கயிலை
நிலங்காதி விட்டி யருள்செய்யும் வைப்பு
நிமிர்பூர ணக்கி ரியெனும்
தலங்கோடி நின்னை யருளாகி நின்ற
தவரன்றி யாவ ரறிவார். (கூச)

வேத மத்தகம ளைந்துகி டந்த
விழுப்பெ ருந்துதியெ டுத்துந வின்று
பேதை மைக்குணமி குத்தக ருத்தாற்
பீடி லாதசிறு நாயடி யேன்செய்
ஏத மத்தனையு மின்றுபொ றுத்திங்
கின்ன ருட்கருணை நல்குதி யென்று
மாதர் பொற்கமல பீடிகை மேலான்
மனுவ லுங்கழல்ப ணிந்துநி மிர்ந்தான். (கூரு)

மரக தக்கதிர்த ழைத்தக லாப
மஞ்ஞை மீதுவரு மஞ்ஞையொ டொப்பான்
வரந விற்றுதிவ ழங்குது மென்ன
மகிழ்சி றந்துதிரு வாய்மலர் விண்டான்
பரவு வேதன்மகிழ் கூர்ந்துப டைக்கும்
பண்பெ னக்கருள்க வென்னவ ளித்து
விரவு பண்புடைமை யின்னும்வ ரங்கள்
வேண்டு கென்னவவன் வேண்டுத லுற்றான். (௬௬)

வேட்ட நல்வரம ளித்துவி டுக்கும்
வீறி லார்கள்பலர் விண்ணவர் மாட்டும்
வேட்ட நல்வரம னைத்தும்வ ழங்கார்
வேட்ட மாத்திரைவி னைப்பவர் சில்லோர்
வேட்ட நல்வரம ளித்ததன் மேலும்
வேறு நல்வரம்வி ழைவிய ளிப்ப
வேட்ட வண்ணல்கரு ணைத்திற நோக்கி
விம்மி தப்புணரி விம்முமு ழக்கான். (௬௭)

சிறந்த பத்தியடி யேனின தாளிற்
செல்வ நல்குரவி னும்புரி வாழ்வு
மறந்து நின்னடியர் மாட்டுமி கந்த
மதிப்பு றுமையும்வி ருத்தபு ரிக்கண்
உறந்து வாழுநர்வெ றுக்கைய ராகி
யுன்னு கின்றகதி யெய்தலு மங்கண்
அறந்த ழைத்தசிவ லிங்கமி றைஞ்சு
மன்ப ரென்னுலக மெய்தலும் வேண்டும். (௬௮)

இத்த லைப்படுதி ருத்தமெ னும
மெய்த வுந்தலைவ வின்றுவை காசி
ஒத்த பூரணைவி சாகம டுத்த
வெண்மை யாலிவைய டுத்துறு காலைப்
பைத்த விப்புனல்ப டிந்தவர் மும்மைப்
பாத கங்கள்பல வுந்தப நூறி
மெத்து செல்வமலி பொன்னுல கெய்தி
வீற வுங்கருணை நல்குதல் வேண்டும். (௬௯)

அளிய னிங்குநவி ரேத்திர மோது
மன்பு ளார்கவிதை நான்குந டாத்தும்
களிமி குங்கவிக ளாகிவ ளங்கள்
களுலி யெப்பிணியு முப்புடை கண்டாங்
கொளிசெய் நின்னுலக மெய்தலும் வேண்டு
மொருவ வென்னவர முற்றும ளித்து
நளிய ருட்புணரி யாங்கும றைந்து
நலத்த கோயிலினை நண்ணின னன்றே. (கOO)

பவள வாய்ச்சிறக ரோதிம மூரும்
பண்ண வன்களித ழைத்தன னேகித்
துவளி டைக்கலைம ணுட்டியொ டண்மித்
தொன்று போலுலக ளித்திட லுற்றான்
குவளை பூத்தொளிரு மத்தகு தீர்த்தங்
கோத ரும்பிரம தீர்த்தமெ னும்பேர்
திவளி ரும்புகழி னேடுவி ளங்கித்
தேவ ரும்படிய நின்றதை யன்றே. (கOக)

எப்பெ ருங்கலையு ணர்ச்சிய ரேனு
மெப்பெ ருந்துயரு ழந்தவி டத்தும்
அப்பெ ருந்துயர மீட்டும்வி ளைக்கு
மத்த குந்தொழின்மு யங்குவ தன்றி
ஒப்ப ருந்தலைவன் மெய்யரு ளின்ப
வுததி மூழ்கும்வகை தன்னமு முன்னார்
பப்ப ருந்துயர்பல் காலுமு ழந்தும்
பங்க யன்றொழிலை மீட்டனன் மாதோ. (கOஉ)

விண்ண வர்க்கவிபி னின்பம்வி ளைத்து
மேதி னிக்குமுறை யாவும்வி ளைத்தும்
கண்ணு தற்பர னடித்துணை நாளுங்
காத லன்புவளர் பூசைவி ளைத்தும்
எண்ண மிக்கமுனி வீரய னேற்றங்
கெய்த ருந்தொழின்மை பெற்றமை சொற்றும்
அண்ண னந்திதவ மாற்றுபு செவ்வே
ளருள்கி டைத்தவியர் காதைதெ ரிப்பாம். (கOஙு)

பிரமன் சிருட்டிபெறு படலம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — எகஅ.

இவரிழைக் குப்பைகுன் றிழுது பாறயிர்
தவழ்வகா ஞறுகு சாந்து சேதகம்
அவிர்மணிச் சுண்ணமெல் லயிர்ப்பி றக்கமாய்
நவமணி வீதிநா னிலமுங் காட்டுமே. (௧0௪)

பொன்னினு மணியினும் பொற்பச் செய்தணிந்
தின்னகை மாந்தரா ரிகந்த தாமரை
மின்னகு குவளையுஞ் சாந்தும் வேரியும்
துன்னிய மறுகுக ளோடை தோற்றுமே. (௧0ரு)

அரத்தகச் சுவடுமிக் கார்ந்து குங்குமம்
பரத்தலின் வச்சிரம் பதித்த மேனிலம்
வரத்தின ரூற்றிணை மாழ்கித் தன்னுருக்
கரத்தல்செய் மணிப்படாம் போர்த்த காட்சித்தே. (௧0௬)

வேற்றுரு வாயவண் விரவெண் வேலையும்
ஆற்றுமேழ் மேகமு மழகு கண்டெனச்
சாற்றரு மோகையிற் றழங்கிறு லெனத்
தோற்றும்பன் மறைகளின் றுதிகண் மிக்கவே. (௧0௭)

நேமிவண் கிரிமுத னெடிய குன்றெலாம்
தாமிவர் களிப்பிறைற் றருக்கி றுலெனப்
போமிடந் தொறுந்தொழில் புரியு மீளுறும்
காமரு விமானமுங் கணிப்பி றேருமே. (௧0அ)

நிறுத்திய நிலைநெடுந் தேர்க ளெண்ணில
கறுத்தொரு வரைதுளை கண்ட வண்ணலை
உறுத்துளக் குகையிடை யோகு ழந்துமன்
மறுத்தப நின்றநல் வரைகள் போன்றவே. (௧0௯)

பிலிற்றுதண் மதுப்பொழிற் பொருப்பின் சேணெலாம்
இலிற்றுமும் மதக்களி றெண்ணி லாதன
வெளிற்றறி வினர்பொறி விழையச் செல்லுமால்
குளிற்றுவண் முரசினர் குழாம்வி லங்கவே. (௧௧0)

கலஞ்சிதர்ந் திரும்புவேய் காலி டுந்தொறும்
நிலஞ்செதி ளெடுத்தவாய் நிரப்ப மாமணிக்
குலஞ்செறிந் தைங்கதிக் கோணஞ் செல்லுமால்
பொலஞ்செய்பூ ணினர்நிகாப் புலன்க ணுடியே. (கக௧)

இன்னண மணச்சிறப் பியன்ற பாணியில்
பொன்னலர்த் தவிசினன் புரையின் மாதவர்
பன்னிய சமிதைபைந் தருப்பை யாதியின்
துன்னுற மன்றல்செய் சூழ னண்ணினன். (கக௨)

வேயின தோளியோர் பாக மேவுறக்
காயிலைச் சூற்படைக் கடவு ளையகன்
பாயின வுருத்திரர் பாங்கர்ச் சூழ்தர
ஆயிடைப் புகுந்தகன் றவிசின் வைகினன். (ககங)

இந்திரனு மறுவிகந்த விமையவரு
மேவல்வினை யியற்று நிற்பக்
கொந்தொளிப கவுத்துவத்தன் றழகெறிக்கும்
வரைமார்பன் குமரற் றழாச்
சுந்தரப்பன் மணிகுயின்ற மண்டபத்திற்
றுளும்புமொளித் தவிசி னேற்றி
அந்தரகங் கையைமுதலாப் பலவுமனுப்
புகன்றுமுறை யாட்டி னனால். (ககச)

செழுந்துபடு மரகதனார்செய் மணிமலையிற்
செறிந்தபைங்கார் சென்று சாலப்
பொழிந்தபின்னை மஞ்ஞதவழ்ந் தாலென்னவெண்
டுகொடு புலர்த்திப் போக்கி
எழுந்தொளிருங் கிரணமணி யணைநாலுங்
கோவணமு மிலகு பட்டும்
தழுந்தரத்த வணிந்தநறுஞ் சந்தனமுஞ்
சேறுருவிற் றயங்கச் சாத்தி. (ககரு)

தாவில்பல மறைகளுஞ்சுப் பிரமணிய
னெனவெடுத்துச் சாற்று மாறு
மூவுலகும் பெறலரிய முரஞ்சொளிய
விம்மணியாற் போலு மென்னத்
தேவர்களு மருட்கைகொடு நோக்கநவ
மணியிமைக்குந் தெய்வ மோலி
பூவமலு நறுங்குஞ்சி கைசெய்த
திருமுடியிற் பொற்பச் சூட்டி. (கககூ)

பாண்டரங்க னுதற்கிளைத்த பரவையொளி
விழித்தழற்பல் புலிங்கம் போலாம்
ஈண்டிலங்கு மணியுருவா யெழுந்துலகந்
தழன்மகனென் றியம்பப் பட்ட
ஆண்டகைமைக் கங்கிவிழி மிகையாமென்
றணியாத நுதலின் மாதோ
காண்டகுமக் கனல்விழிபோற் கதிர்க்குமர
தனவோடை கவின வீக்கி. (ககஎ)

காமவேண் மணிக்கவிகை மருங்கடுத்த
கொடிமகரங் கடுத்துங் கஞ்சப்
பூமரீஇப் புறங்கிடந்த மகரமொடு
மலைத்துமெழில் பூப்ப முன்னர்
நாமநீர் நறும்பொய்கை யிருந்ததற்கோ
ரடையாள நண்ணிற் றென்ன
ஏமவா னுலகேத்து மணிமகரக்
குழைசெவியி னிலங்கத் தூக்கி. (ககஅ)

மண்டியதன் பெருங்கீர்த்தி வயங்குமதி
யெனவண்ட வகுப்பு முற்றும்
கொண்டொளிர்வ தாகரமற் றிவனேயென்
றுலகமெலாங் குறிப்ப மும்மைப்
புண்டரமென் றவிர்நுதலிற் செங்கதிரென்
றண்டமெலாம் புகர்கால் சீக்கும்
மிண்டுபிர தாபமுமவ் வாறடுத்தா
லெனத்திலக மிளிரத் தைத்து. (கககூ)

சேந்துமகர்த் தரிபரந்து குழைகிழிக்கு
மிருமாதர் செழுங்கண் வாய்வைத்
தேந்துநலன் முழுதுமினி துண்ணவரை
தவினேனை மாத ரங்குப்
போந்தவர்கண் புகுந்துழக்கி மிச்சில்படுத்
தாவரணம் போலத் தோளில்
சாந்துமணி யங்கதமும் வரைமார்பிற்
பலகலனுங் கஞலப் பூட்டி. (௧௨௦)

தன்னுருவிற் றெழிற்கும்வினை முகற்றேனே
யெனுந்தன்மை சகங்க டெள்ளத்
தன்னுருவிற் றெழிற்கருவி தானாகு
மணிக்கடகந் தடங்கை யேற்றித்
தன்னுருவி னிளையனுமாய் முதுக்குறைவிற்
பெரியனுமாந் தனையே யொக்குந்
தன்னுருவிற் சிறந்துவிலை வரம்பிகந்த
மணியாழி தகையக் கோத்து. (௧௨௧)

அரிக்குரற்கிண் கிணிசிலம்புந் தண்டையுஞ்சே
வடியணிந்து பணிந்தான் கீர்த்தி
விரிக்குமறு முகவனெழுந் தியமியம்பக்
கொடிதுவன்ற வீங்கு மல்லைப்
பொரிக்குமகிக் குடைநிழற்ற வரம்பையர்சா
மரையிரட்டப் புலவர் சூழப்
பரிக்குமணிக் கவினிவுளி யிவர்ந்தூர்ந்து
நகர்வீதி படர்ந்து சென்றான். (௧௨௨)

கொங்குலாம் வீதியி னகருளார் பணிசெயக் கொடுசெலும்
எங்கணு யகனெதிர் முனிவரர் யாவரு மினிதணை
பொங்கொளிக் கரகநீர் தூவியா சிகள்புகன் றேத்தினர்
மங்கைய ரெண்வகை மங்கலங் கொண்டெதிர் வாழ்த்தினர். ()

பஞ்சுசெய் நாவியும் பனிதமு நிவிய தீஞ்சுடர்
விஞ்சுபொற் படலிகை யேந்திவிண் மாதரார் மென்மெல
அஞ்சிலம் படிபெயர்த் திடுகிடை தவளமுன் னண்மினர்
மஞ்சனை மரபுளி காட்டினா ரிட்டினர் மாதவம். (௧௨௪)

வாம்பரி நின்றிழிந் தெம்பிரான் மன்றல்செய் மண்டபத்
தோம்புமுன் வாய்தலிற் சேறலும் வேடர்கோ னுரிமையாள்
தீம்பயத் தாட்டினுள் சேவடி மாமலர் சூட்டினுள்
எம்பலுற் றயினிநீர்ச் செஞ்சுடர் சுற்றியிட் டாளரோ. (கஉரு)

அகவயிற் சென்றன னம்மையோ டப்பரைத் தாழ்ந்தனன்
நகுமுகத் திருமுது குரவர்த மேவலி னவமணித்
தகுபொலந் தவிசிடை வைகினுன் முன்னரே சார்ங்கனல்
திகழ்மலர் மாதராள் வள்ளியைச் சேர்ந்திது செய்தனள். ()

விசும்பு மகளிர் முனிவர் மகளிர் விரசிப் பரசித் தொடர
அசும்பு நறிய மதுமென் கோதை யளகத் திருவண் களபம்
இசும்புண் முலையிற் றிவளு மறுவை யிளக விறைஞ்சி யெழுந்து
தசும்பு நிகரு முலைமெல் லியன்முன் றரிதத கோலந் தணத்தாள்.

நாமா மகளுஞ் சசியு மேவ னயந்து புரிய நறுமென்
பூமாண் டயில மள்ளி வளைகள் புலம்ப வோதி யுரைத்துத்
தீமா ணெல்லிக் கனியுண் சாந்து திமிர்ந்து விரையுந் துவரும்
ஓமா லிகையு முரிஞி யுடல மொளிர மண்ணுச் செய்தாள். ()

ஈரம் வறல நுழைநாற் கலிங்க மேந்தி முழுது முளர்ந்து
நீரி னணைந்த தூசு களைந்து நிகரில் செம்பட் டுடுத்துத்
தாரு மணியின் வடமு நான்ற தலனிற் றவிசி னிருவி
ஒரு மிபத்தின் மருப்புச் சீப்பி னேதி வாரி முடித்தாள். (கஉகூ)

முழுதுலகுங் கமழ்நானக் கலவைவிரைப்
புகையூட்டி முறையி னீவிக்
குழலளகம் வகுத்தமைத்துக் கொண்டையெறு
ழேற்றிமில்சீர் குறைய வாக்கி
நிழலுமிழ்நீன் மணிப்பனிச்சை பஞ்சையிணை
விரித்தியற்றி நிகரி லைம்பால்
அழகெறிப்ப நித்திலமா லிகைநான்ற
மணிமகர மமையச் சேர்த்தாள். (கஙo)

தூநறுங் குவளைப் போது தொடிக்கையி னெரித்து வாங்கித்
தேனறு வேங்கை நாறுந் தீங்குழற் செருகி முல்லைப்
பூநறுந் தொடையன் முச்சிப் புறங்குலா யிழைப் பைந்தார்
கானறுங் கதுப்புச் சுற்றிற் காருமிழ் மின்னிற் சூழ்ந்தாள். ()

முழுதெழிற் றிறத்தா னேற்றமுந் தன்மையாற் றன்னைத் தாழ்த்த
பழுதிலாள் சென்னித் தன்போற் பயிற்றிய தெய்வ வுத்தி
வழுவிய பிறையுஞ் சூட்டாண் மயில்வலம் புரியுந் தாழ்த்தாள்
ஒழுகொளிப் பிறைமா மஞ்ஞை யுறுத்தின ளுறுவ தோர்ந்தே.

காரெனக் கிளத்தற் கேற்பக் கண்ணுதல் சடில வாழ்க்கைச்
சீரிய பிறையுங் கானஞ் செப்புதற் கேற்பச் செவ்வேள் [தாள்
போரியல் கொடியின் வாழ்க்கைப் பொறிமயிற் போத்துஞ் சேர்த்
வாரியன் மணிப்பொற் சுட்டி தாழமண் ணுறுத்தா ளன்றே.

இளமழை யூடு போந்தங் கிலங்குமோ ரரவ நக்கும்
பிளவிபன் மதியே போலும் பிறங்கொளிச் சுட்டி தாழ
உளர்நறு நுதலி னோடை வுருகுபொற் பட்டம் யாத்து
வளவிய நாகங் கான்ற மணியெனத் திலக மிட்டாள். (கஅச)

பாட்டளித் துளவத் தாரான் பயந்தலி னவன்போன் மைத்துப்
சேட்டிளம் பிணைமா னீன்ற செய்தியா லதன்க ணைத்தும்
வேட்டுவர் குலத்துச் சார்பா லவர்கைவெஞ் சரத்தின் வைத்தும்
காட்டிய விழிக்கு மாதோ கரியமை யெழுதி யிட்டாள். (கஅரு)

நலம்புரிந் தருள வேண்டி நறுமுகை முல்லை மூரற்
குலம்புரி பவளக் கோயிற் கொழுமணி வாயில் காவல்
வலம்புரி பொருமுத் தன்மி வதிந்தென வார்ந்த நாசி
வலம்புரி முத்த நான்ற வயங்குபொற் றொடரைக் சேர்த்தாள்.

பங்கய மலரை வென்ற பாயரி மதர்க்க ணோக்கிற்
செங்கய லீது மாந்தித் தேக்கலா மென்று போந்து
தங்கிய மகர மென்னத் தரித்தனள் குழைவார் காதில்
அங்கது வெருண்டு தாக்கி யலைப்பதின் றல்லை யன்றே. (கஅஎ)

வானர மகளிர்க் கெல்லாம் வதுவைசூட் டிடவோ ரங்கை
தானமைத் தருளு மையன் றரிக்குமங் கலநாண் டாங்கும்
நானவண் களத்துக் கட்டு வடநகை மணிக்காழ் சூழ்ந்தாள்
ஆனவொண் ணிதிகள் பாங்க ரருங்கல னுமிழ்ந்த வேபோல். ()

தனையடுத் தவரைத் தன்போற் றகைநலத் துறுத்து வான்போற்
கனைகதிர் மணிபொற் காழுங் கடிமலர்த் தொங்கன் மற்றும்
புனைவன தாங்கி வல்லாப் புணர்முலைக் கணிசெய் தோங்கும்
வனைபுகழ்ப் பணைமென் றோளை வயிரவங் கதம்பூண் பித்தாள்.

புரிமுறுக் கவிழுங் கஞ்சப் பூவினை வாட்டு மங்கை
விரிமலர்க் கஞ்ச நண்பன் வெய்தடுத் திரந்து நின்றுங்
கெரிமணிக் கடக முன்கை யினவளை செறித்துப் பூட்டித்
தெரிமணி யாழி கோத்துச் செறித்தனள் விரல்க டோறும். ()

குளிர்பனி நீரிற் சேர்த்துக் குங்குமக் கலவை கொட்டி
ஒளிமணி தகர்த்த சுண்ண முறுபுகை யப்பி யூட்டித்
துளிமதுத் தொங்கல் பொற்றூர் சுடர்மணி மதாணி மற்றும்
தெளிகதிர் முத்த மாலைத் திரளொடு கவினப் பூண்டாள். ()

முகநிதிக் கமல மீன்ற முத்தமோ களச்சங் கின்ற
புகரினித் திலமோ மென்றோட் புனக்கழை சொரிந்த வோகற்
றகர்முலைக் களிற்றுக் கோட்டுத் தரளமோ வென்னு மாரம்
திகழ்நகை மணியைத் தாழச் செவ்விபார்த் திருப்ப போந்தே.

கச்சப வடிவிற் றாகிக் கடலெனப் பரந்து தோன்றி
வெச்சென தாக்கும் வேழ வேந்தின்மத் தகத்தைச் சீறி
முச்சகம் வணக்கு மாரன் மூரிமான் றேரைத் தாழ்க்கும்
அச்செழு நிதம்பஞ் சேர்த்தா ளைம்பெயர் பூண்ட காழும். (கசஙு)

மேருவு மேருச் சென்னித் துருவனும் வெளியு மாங்குச்
சாருடுத் திரளுந் தூநீர்த் தடத்திடை நிழற்றிற் றென்ன
வாருறு முலையும் வார்ந்த மயிர்மணி யொழுக்கு நள்ளாய்ச்
சேருநுண் ணுசுப்பு மல்குற் செறித்தபல் காழுந் தோன்றும். ()

கிம்புரி வடிவின் மின்னுங் கிளர்மணிச் செறிகை பற்றிக்
கம்பமால் களிநல் யானைப் பிணர்படு காமர் கையும்
உம்பர்வா னோக்கும் வாழை யுருவமும் வறிய வாக்கிச்
செம்பொன்வார் கலையிற் பட்டிற் றிகழ்குறங் கணிதல்செய்தாள்.

சில்லரிச் சிலம்பு செம்பொற் கிண்கிணி பாத சாலம்
புல்லிய பரடு கவ்விப் புலம்புற வணிந்து வார்ந்த
நல்லெழில் விரன்ம னாவி னகைமின்னுச் செறியு ளாக்கி
வில்லுமிழ் பட்டின் றேக்கை மேதக விரலிபி னாளே. (௧௪௬)

அலத்தக மெழுதக் கைக்கொண் டம்மல ரடிக ணோக்கி
நலத்தகு தளிர்க்கை நோக்கி யவற்றொளிர் நகமு நோக்கிக்
குலத்தகு பவள வாயுங் கூர்மணி நாவு நோக்கி
நிலத்திடை யிட்டா ளூட்டா நிறத்தொடு நேரா தென்றே. ()

பிறர்க்கணி படுக்கு மாற்ற லணியெனும் பெயர வெல்லாம்
சிறக்குநின் னனையாண் மெய்யிற் சேர்ந்தணி பெற்று முன்னர்
உறுத்தவப் பெயரி னீங்கா வாயின வொருவர் தம்பால்
துறத்திடப் படார்கொ லொண்மை துறத்தவ ரெவர்க்கு மொண்மை

செந்திரு நமக்குச் சேமஞ் செய்தவவ் வணிக ளென்றே
இந்தமான் பிணைக்கொப் பித்தா ளென்ன மருட்கைத் தம்மா
முந்தறி யாத காமர் முதிர்ந்தவென் றயிர்த்து நொந்தாள்
அந்தின்மற் றிருந்தோர் தாமு மயிர்த்தன ருயிர்த்து நின்றார்.

ஆடவர் திலக னான வமரருக் கமரன் வார்வில்
வேடர்தங் கானை யாகி வேங்கையாய் நிழற்றிச் சால
வாடின னடியில் வீழ்ந்த மரபெலாந் தகவே யன்றோ
ஈடரு மயிலின் சாய லிவள்கடைக் கணித்தற் கென்றார். (௧௫௦)

பெண்மையாற் பெண்க ளெல்லாம் பெருந்தவ மாற்றி யாண்மை
வண்மையாற் றோடு மென்ன மகிழ்நனி யுடற்றுங் கற்பின்
திண்மையா ளன்னை யான செய்தியா லெவர்க்கு மாண்மை
உண்மையா னந்தன் றாயி னுரைபொடுங் கெடுவ தென்றார். ()

நாரணன் மார னேனோர் நலத்தகு தன்மு னீங்கின்
சீரணி யழக ராகுஞ் செறிவனப் புடைய நம்பி
வாரணி முலையாட் கொத்தான் மங்கையர் யாருந் தன்முன்
ஏரணி யில்லா ராகு மிவளவற் கொத்தா ளென்றார். (கருஉ)

அழகினி னிளமைக் காம்ப்பி னழிவிலா யுதத்திற் காப்பின்
விழைவருள் கவிகை மாண்பின் வீரத்திற் கல்விச் சால்பின்
முழுவலி யிருள்கால் சிக்கு முதன்மையி னிகரில் லானைத்
தொழுமண வாள னுக்குஞ் சுந்தரி தவம்யா தென்னு. (கருஙூ)

சிந்தா மணியே தெய்வத் தருவே
கொந்தார் தருவிற் குலவுங் கொடியே
அந்தா மரைசங் கெனுமா நிதியே
நந்தா வொளியே நறையே யமுதே. (கருச)

மாவின் குயிலே மருதின் கிளியே
காவின் மயிலே கானப் புறவே
பூவின் னனமே புறவின் பிணையென்
றேவின் விழியா ரினிதேத் தினரால். (கருரு)

பூமருவு பந்தர்ப் பொலந்தவிசி
னின்றெழுந்து பூங்கொம் பொன்று
காமரணி யணிந்து காவணத்தி
னூடுநடை கற்று லென்னத்
தேமருவு கோதைத் திலகத்
திருநுதலா டிரள்சங் கார்ப்பப்
பாமருவு பாடல் பயிலமட
வார்சூழப் பையச் சென்றாள். (கருசா)

கம்மப் பலகலனும் வில்லுமிழ
நூபுரமே கலைக ளார்ப்பப்
பொம்மற் குவிமுலை யோபாரம்
பொறையரிது போலு மென்ன

அம்மெல் லிடைவருந்த வங்கை
வளைதெளிர்ப்ப வான்றோ ரொன்றுஞ்
செம்மற் கடிவினைசெய் தெய்வமணி
மண்டபமுன் சேர்ந்துள் புக்காள். (கருஎ)

செம்பொன் மணிப்பீடத் தும்பர்பிரான்
சேவடிக்கீழ்ச் சென்று தாழ்ந்து
பைம்பொன் னிழைசுமந்து பாங்கிருந்தாள்
பாதம் பணிந்தன் னோர்தம்
வம்பில் கருணைமழைக் குத்தழைத்
தரும்பி மலர்ந்த கற்பக்
கொம்பிற் கொளவொசிந்து தம்பெருமான்
பாற்குறுகி வைகி னளால். (கருஅ)

நம்பியென் றியற்பேர் பூண்ட நற்றவ வேட னம்பிப்
பம்பிய பரமா னந்தன் பயந்தவிர் சதாசி வன்றன்
வெம்பழல் விழிக்கட் டந்த வேலவற் கென்பால் வந்த
கொம்பினைக் கொடுத்தே னென்று தன்வழிப் பெயருங் கூறி.

மங்கலத் துழனி பொங்க வாசநீர் மனைவி நீட்டச்
செங்கையேற் றுகுத்து நல்கத் தேவர்க டேவ னேற்றன்
பங்கய னுமாம கேசர் பாதபூ சனைசெய் தேத்தி
அங்குரந் தெளித்து முன்னைக் கங்கண மார்த்தல் செய்தான்.

மூத்தநூல் வழியா நாந்தி முகமெனுஞ் சிராத்த மோம்பிப்
பாத்திய முதல மூன்றும் பாங்குற வமைத்துக் கொண்டு
தீத்தகு குண்டந் தூய்மை செய்தத னகத்தி ரேகை
தூத்தகு வடசார் கீழ்சா ரந்திப்பத் தொடங்கி வார்த்தான். ()

இழைத்துவிட் டரத்தை நாப்ப ணிருத்திப்பூத் திருநீர் தோய்ந்த
கழைத்தபா சொளியின் மேனிக் கயங்கிழைச் சத்தி போடு
மழைத்தட நாற்கை முக்கண் வயங்குசெவ் வுருவி னானை
உழைத்தவி சளித்து றத்தி யுவப்புறப் பூசை செய்தான் ()

அரணியின் ஞெலிந்த வங்கி யரதனக் கலத்தி லாக்கி
இரணவல் லரக்கர் சாய வெடுத்ததில் வறிது போக்கி
வரமுறப் பார்த்து விந்து வயங்கமிழ் தெடுத்து வைத்துப்
பரவுறப் படுத்து முக்காற் பாணியிற் கொட்டிச் சூழ்ந்தான். ()

மாசறு மங்கி செங்கை மறித்தனன் வளைத்துப் பற்றி
நாசியிற் பூர கத்தா னடத்திவிந் துவினுங் குள்ள
தேசொளி யோடுங் கும்பித் துந்தியிற் செலுத்தி யங்கண்
வீசொளி விராய்வி டுத்து விளங்கவுற் பவமுள் வைத்தான். ()

அருச்சனை நிரப்பித் தெய்வ வான்முலை யமிழ்தம் பாய்த்தித்
திருத்தக வளைத்துக் காவல் செய்துமீட் டருச்சித் தங்கி
கரத்தினி தேந்தி முக்காற் காமரு குண்டஞ் சுற்றி
இருத்துபு முழந்தாள் பூமி யெதிருற வகத்தி னிட்டான். (௧௬௫)

வடகிழக் கெல்லை சென்னி வைத்தனன் பள்ளி கொண்ட
கடவுளாற் சத்தி குக்கிக் கதிர்த்தவீ ரியமாய்ப் புக்குச்
சுடரெரி கருப்பங் கொள்ளத் தொடங்குபு கருப்பா தானம்
நடுவன முறையி னூற்றி நாமமு நல்க விட்டான். (௧௬௬)

வளர்சிவ வங்கி யீன்ற வரதரை யலர்க ணேய்த்தன்
உளமலர்க் கமலத் தாக்கி யருக்கிய வுதகந் தூவித்
தளைசெய்மே கலைநாற் பாலுந் தருப்பைகள் பரப்பிக் கஞ்சன்
துளவின னரன னந்தற் றேற்றினன் கீழ்சா ராதி. (௧௬௭)

பரிதியங் குறுத்தி மேலாற் பண்ணவர்க் கிறைமுன் னேரை
விரவுறு தத்தந் திக்கின் மேதக விருத்தி நெய்தூங்
கருவியை யிழுதைத் தூய்மை கண்டழ லிதயப் போதில்
பரமனைப் பயிற்றிப் போற்றி யாகுதி பல்ல செய்தான். (௧௬௮)

அங்கியின் மேல்பா லிட்ட வாதனத் திருத்தித் தூசு
கொங்கலர் மனுவி னல்கி யிடையிடை குறித்த வோமப்
பொங்கெரி வளர்ப்ப நம்பி பூவைத னிதயந் தொட்டான்
சங்கர னுமையென் றுன்னித் தருமது வருக்க மேற்றான். (௧௬௯)

தீஞ்சுவைச் சொன்றி யுப்பக் திருவிழிப் பார்வை நல்கிக்
காஞ்சனக் கலத்தி னிட்டுங் கடவுளா சமனம் வாங்கிப்
பூஞ்சுரைக் காம தேனுக் கன்றெடும் போத நோக்கித்
தாஞ்சிகை யழற்கு வாமக் கன்னிலே முடிபிட் டானல். (கஎO)

அச்சுதன் முன்ன ரின்ற வரிவைதன் னிடத்து மூவா
அச்சுதந் தரனர் நெற்றி யங்கியிற் சுதித்துப் போந்த
அச்சுதன் வலக்கை பற்றி முறையினே முடியிட் டண்மி
அச்சுதந் தெளித்து வல்லி யடிபெடுத் தம்மி யிட்டான். (கஎக)

பொரிபெரி மனைவி யட்ட வுடனின்று போந்து முன்போல்
எரிமணித் தவிசின் வைகி யிலங்குமங் கலநாண் வாங்கித்
தெரிவைதன் மிடற்றிற் றேவ துந்துபி முழங்க யாத்தான்
பிரமனு முற்ற வங்கி வினையினைப் பிறக்கி யிட்டான். (கஎஉ)

ஆர்த்தன பணில மாதி யாடின கணங்க டுள்ளித்
தூர்த்தனர் சுரர்பூ மாரி சுரந்தன துதியின் சும்மை
போர்த்தனன் புளகம் வேடன் பொடித்தன வுவகை யார்க்குங்
கீர்த்தனுங் கருணை கூர்ந்தான் றேவியு மகிழ்ச்சி பூத்தாள். ()

வேடர்கோ னீரி னல்க வேலவ னேற்ற லோடும்
ஆடில விமைக ணீழ லளித்தில துருவ மாலை
வாடில குழலின் வண்டு மருவில நுதலின் வேர்வை
கூடில மாசு தூசு கொண்டில மாத ராட்கே. (கஎச)

பொறிமயிற் புனத்தை யோம்பிப் பூவையைக் கவர்வான் போந்த
நெறியயிற் காந்து நின்ற நிமலனே போலத் தானும்
அறிவளர் சார ணம்மூர்க் காந்தனன் வளர்ந்தாள் கொல்லோ
முறியியன் மேனி யென்று முழுதுள மகிழ்ந்தார் வேடர். ()

எத்துணை யறங்கள் சால விட்டினன் வேடர் கோமான்
பத்தியிற் பலநாட் டாழ்ந்தென் பாவையைப் பனிப்ப வேற்ற
உத்தமன் றனையன்றி பொருளில கைக் காழ்ந்து
புத்திரி செங்கை பற்ற வென்றனன் புலவர் கோமான். (கஎகூ)

மாதவ னெனும்பே ரல்லான் மாதவ மீங்கொன் றில்லை
மாதவன் புலவர் கோமான் மற்றவன் றன்னிற் சால
மாதவன் புளினர் கோமான் வளர்த்தரு டெய்வக் கற்பின்
மாதவள் பாங்கி னின்றா ளென்றனன் மதுவை யட்டோன். ()

இந்திரன் மனைவி முன்ன ரீட்டினள் சீர்த்தி யெல்லாம்
வெந்திறல் வேட னில்லும் விளைத்தன ளின்று சால
எந்தரத் தென்னோ தெய்வ மேதுமின் றாக்கிற் றென்றாள்
செந்திரு மானை யுன்னித் திருவுளேம் யாமு மென்றாள். (கஎஅ)

வல்லிநற் றாயைப் புல்லிக் கொண்டனள் வலாரி யில்லாள்
வெல்லுநாற் கோட்டு வேழம் வியந்தது செவிலித் தாயைப்
புல்லினர் பாங்கி தன்னைப் புலோமசை மகளைச் சூழ்ந்த
பல்லிணர்க் கோதைக் கூந்தற் பாங்கியர் பலரு மன்னோ.(கஎகூ)

ஒருக்கிய வுளத்த ராகி யுயர்தவ மாற்றி னோர்கள்
தரைத்தலை யிழிந்த சார்பிற் றவிரினுந் தவத்தி னாற்றிற்
பொருத்துழியெவர்க்குமேலாய்ப்பொலிவதுவாய்மையென்னாத்
திருக்கிளர் தெய்வ மாதர் விம்மிதந் திகழ நின்றார். (கஅ0)

அருந்தவப் பயனு ளார்கட் கடுத்தவெவ் வுழியு மாவா
திருந்திய போக வைப்பாய்த் திகழ்வது திண்ணம் போலாம்
மருந்தம ருலகு நேரா வளத்தொடு வள்ளி மன்றற்
கிருந்ததிவ் வோங்க லென்னா மாந்தர்க ளேமுற் றாரே. (கஅக)

தரையுரங் கிழித்த கோடு மார்பிடைத் தயங்க வேணி
விரையுரங் கிழித்த கொன்றை மிலைத்தவித் தகனை வேலைத்
திரையுரங் கிழித்த சேற்க ணன்னையைத் தேவி யோடும்
வரையுரங் கிழித்த வைவேல் வள்ளல்சென் றிறைஞ்சி னானால்.

பொழிந்தனர்கருணைவெள்ளம்பொலிகவென்றெடுத்துத்தைவந்
திழிந்தனர் தவிசி னின்று மிலங்குதங் கோயில் புக்கார்
அழிந்தன மலங்கண் மூன்று மகமெலாந் தேக்கி யோகை
வழிந்தன வெவர்க்கு மென்றான் மன்றலார் வகுக்க வல்லார்.

மாய ஞாதியர் வார்கழற் றாழ்ந்தினி
மேய யாவரும் வீதியிற் காணிய
போயு லாவரல் புந்திகொ ளாயென
ஆய னனவர்க் கவ்வர மீந்தனன். (கஅச)

பன்னி றப்பக டுண்டுகொ லோவென
எந்தி றக்கல னுங்கதிர்த் தேர்தரும்
துன்ன ருந்திறற் றாங்குகை வாரணம்
முன்ன ருய்த்தனர் முன்னவ னேறினன். (கஅரு)

பரந்து மாதர்பல் லாண்டுப யின்றுளம்
சுரந்த வோகைய ராய்ப்புறஞ் சூழ்தர
வரந்த ழைத்தசி விகையின் வையகத்
தரந்தை தீர்க்கும ணங்கிவர்ந் தாளரோ. (கஅசு)

ஒற்றை யங்கலை யூர்புன னீண்முடி
பற்றி வேய்ந்தப ரன்குரு வாதலான்
முற்றும் வான்மதி யேமுடி வைத்தெனக்
கற்ற சோமன்க விகைக வித்தனன். (கஅஎ)

எம்மை யின்றவ னேயிவ னென்பபோற்
செம்மல் பாலணை வித்திரு மார்பனும்
மும்மை வையக முந்தரு மூர்த்தியும்
கைம்ம லர்க்கட் கவரிது ளக்கினர். (கஅஅ)

வள்ளெ யூடங்கரு வித்திரன் மானுற
வளிபி னட்டயர் வார்கொடி வெண்ணில
வளித னக்கிறை யோடுகை வெளவினை
வளிபின் வைப்பார் வாழ்க்கையர் யாவரும். (கஅகூ)

ஆன நெய்பளி தத்தின விரொளி
கான றும்புகை யுங்கன லோடவன்
மாந கர்க்கணு ளார்கள்வ யக்கினர்
மான நாகர்ம ணிவிளக் கேந்தினர். (ககூo)

விரைது மூவிய மென்பனி நீர்புனல்
அரைய னண்ணன்மெய் தூவவ மைந்தனன்
வரையி ழுக்கச்சி விறியின் வாங்கினர்
புரையி லாவவன் பொன்னகர் வாழ்நரே. (௧௬௧)

மாலை யாத்தக விகைவ ருக்கமும்
ஆல வட்டமு மார்ந்தசாந் தாற்றியும்
கோல வெள்ளையுங் கொண்டனர் பானுவும்
சானு ஞாயிற்று லகவர் தாமுமே. (௧௬௨)

சோதி நாரதத் தூமுனி பாலராய்
ஆதி யாழ்முதல் யாவும மைத்துளார்
கோதி லாதகு ணந்தரும் யாழினோர்
மாத ராரொடும் வண்புகழ் பாடினர். (௧௬௩)

குளிர்ப்பக் கண்டகொ ழுங்கணு நெஞ்சமும்
மிளிர்ப்பக் காமரு மின்னினு டங்குபு
தெளிர்ப்பக் கைவள்ளி தெய்வத மாதரார்
தளிர்ப்பத் தீஞ்சுவை பாடலிற் றங்கினர். (௧௬௪)

மாண்ட சோதிம ணிமுடி வானவர்
காண்ட கக்கதித் தாடுநர் பாற்றழூஉம்
பாண்டி லுங்குழ லுங்குரற் பாடலும்
தீண்டு கைம்முழ வுந்திசை தேக்கின. (௧௬௫)

பானு கம்பன்ப ணிலமு ரன்றன
மான வாணன்கு டமுழா மல்கிய
தான பீலிவ யிர்பணே யாதிய
ஈன மில்கண நாதரி யம்பினர். (௧௬௬)

இலக்கர் வீரர்கை யேந்துப டையொடும்
கொலைக்க ளிற்றைக்கு லாயினர் வீரருள்
தலைக்க ணின்றவன் றங்குகை வேத்திரத்
தலக்கண் சிந்தவ டர்சனந் தாக்கினன். (௧௬௭)

வடகி ழக்குத்தி சைப்புற வாழ்க்கையங்
கடவு ளேற்றிமிற் கண்ணுதற் புண்ணியன்
தொடலை மார்பந் துணைக்கையிற் பின்னுபு
முடிவி லாதவி ருதுமு ழக்கினன். (௧௯௮)

சோம திக்கினன் றுன்னிவ லம்புறம்
காமர் பாகடை கைத்தல நீட்டினன்
வாம பாகம ரீஇப்பொற்ப டியகம்
நாம வேற்றரு மன்னனு குற்றனன். (௧௯௯)

மாகர் போற்றிய மண்டமர் ஞாட்பிடைத்
தோகை மாமயி லாகிய தோன்றறான்
ஏக நாயக னேவலி னங்குசப்
பாக னாகிப்ப கடுந டத்தினன். (௨௦௦)

வரையு மாடமு மேடையு மண்டப மாலையும்
விரைய சோலையும் வாயிலும் வீதியு மாந்தர்கள்
நிரைய விண்ணவர் விண்ணிட மெங்குநி றைந்தனர்
அரைய நூர்களி றவ்வயி னவ்வயி னின்றவே (௨௦௧)

புலவர் சிந்திய பொன்னரி மாலையும் பூக்களும்
பலவ ரைக்குலர் பம்பிய தெள்ளனப் பயின்றன
நல்னி ரைந்தவர் தாட்பட நீறுபட் டொய்யெனத்
துவ்வு தம்பதி கொண்டென விண்ணினி வந்தவே. (௨௦௨)

கருப்பு ரங்கமழ் குங்கிலி யங்கன லூட்டிய
மருப்பெ ருப்புகை வானுல கெங்குமவ் வளாவிய
தருப்பு மென்முலை யாரொடு மண்டர்க ணாந்தவள்
விருப்பு றங்கிப் பொலிவுற வல்லிரு ளாய்ந்தென. (௨௦௩)

உரத்தி னப்பிய பான்மரு கூட்டிய சாந்தரோ
டொரித்த லைக்கண்ணி ராவெறி ந்தலை யோர்சொரா
வரித்த நந்தன மார்பிடை பயபிப யக்கின
திரிக்க வல்லிலை தக்கார் பறைசகி ரிந்தென. (௨௦௪)

வடவை முற்றுந் திரட்டி யிடமலை யோடுபின்
படர வோலிடு பவ்வங்க ளொத்தன பல்லியம்
அடிக ளின்றறி வாமெனுஞ் சோடையி னார்த்துராய்த்
தொடர்வ போன்றன பின்னர் முழக்குஞ் சுருதிகள். ()

முருக னேமணி மார்பனே மலர்க்கணை
 முனைவனே விசும்பாளும்
திருவ னேவென வவரலார் தமைப்புனைந்
 துரைப்பவர் திருமார்பத்
தொருவ னேமுத லனைவருந் தவ்வென
 வொலிவனப் புடையானை
முருக னேயிவன் முருகனே யிவனென
 மொழிந்தன ரென்செய்வார். (உ௦௬)

தண்ண றும்புன றசும்பி னேந்திப்போய்
அண்ணன் மாகளிற் றடியின் வாக்குபு
கண்ணி யுங்கமழ் கலவை யுஞ்செழுஞ்
சுண்ண முஞ்சிலர் சொரிந்து போற்றினர். (உ௦௭)

சுரக்குந் தம்முகச் சுடர்க வர்ந்துவிண்
கரக்கு மாதவற் கரைத்துக் சாட்டியாங்
கரக்கு நீர்க்கல னங்கை யிற்சுலாய்ப்
பரக்க மண்ணிடைப் பாய்த்தி னர்சிலர். (உ௦௮)

குவவுக் கோணுதல் குறித்துத் தேய்தரும்
உவவுத் திங்களை யுறுப்ப கைத்தகைத்
தவவுக் கோளினர்க் கறிவித் தாங்குத்துய்க்
கவவுக் கைப்பொரி களுற்றி னர்சிலர். (உ௦௯)

புனித மென்மொழி பொருவ கின்றெழுந்
துனியி னற்சிலர் சுளித்தொ ழித்தெனக்
கனிவ ருக்கமுங் கருப்புத் துண்டமும்
இனிய கட்டியு மீண்ட வீசினர். (உக௦)

பரித்தன் முற்றுமோ பார நீக்கெனத்
தரித்த வொள்ளிறைத் தருணக் கண்ணியைத்
தெரித்த பட்டினச் செம்பொற் குப்பையை
உரித்தென் றேகையி னுகவி னார்சிலர். (உகக)

பாடி னார்சிலர் பணிந்து தட்டமிட்
டாடி னார்சில ராட லோடுமுன்
ஓடி னார்சில ருருவ நோக்கியே
நீடி னார்சிலர் பலர்நெ ருக்கவே. (உகஉ)

முருக்கு மண்ணன்முன் முகுந்தன் மேலெனத்
திருக்கு மால்கொடு செப்பி னேன்பொர
ஒருக்கி மேலெழு முகளக் கைசனம்
நெருக்க நாற்றிலர் நின்று ளார்சிலர். (உகங)

வண்ட லாட்டயர் பேதையர் வரிப்புனை பந்து
விண்டு தாங்கிய வம்மனை வீற்றுவீற் றெழிய
மண்டு சீறடிக் கிண்கிணி வண்சிலம் பொலிப்பச்
செண்டு தாங்கிய களிற்றெதிர் மேனிலைச் சென்றார். (உகச)

வேழம் வாரவற் கென்பர்க ளவன்கொலோ வென்றார்
வேழ மூர்பவ னேயவ னெனவெதிர் விரித்தார்
வேழ மோம்பிய விண்டுகோ லென்றன ரவனே
வேழ வாமத்தர் சாமரை வீசுவா னென்றார். (உகரு)

பொருந்த நாட்டிடை யிந்திர னெடும்புரண் டமைதான்
கருதி மாதவம் புரிந்துறங் களிற்றைக் கொண்ட
முருக னேயென வினவினர் முழுவியவ் வானை
உருவ வாளரிக் கடங்கணி நுரைத்தவே ளென்றார். (உகசு)

இருவர் கன்னிய ரிருந்தவ மாற்றின ரிவன்போல்
மருவி நின்றன னென்பரான் மாதவம் புரியின்
கருணை வள்ளலார் தாமையுங் காப்பரா லாரொ
உணரி னென்றுதந் தோழியொ ரொடும்பரரய்த் தொழுதார். ()

கள்ளம் வெள்விழிக் கின்மையுங் காமத்துக் காதல்
உள்ள மின்மையு மொண்முலை யின்மையே காட்டும்
பிள்ளை மைப்பெரும் பேதைமை தீர்பெதும் பையர்கால்
தள்ள மென்புயத் தாலைவீழ்ந் தோடிமுன் சார்ந்தார். (௨௧அ)

வளருங் கொங்கையெவ் வளவையவ் வளவையின் மலர்க்கண்
வளருங் கள்ளமு மனத்தகக் காதலு மருட்டத்
தளிர ரும்புமெல் லிளங்கொடி தலைநிறீஇ யென்ன
உளம ருங்கெலாந் தலைநிறீஇ நின்றுராய்த் தொழுதார். (௨௧௯)

தமது மாணெழில் விளக்குவான் றனிவனப் புடைய
குமரன் மாணுரு மறைக்குந ரேகுடை கவரி
நிமிரு நீள்கொடி விசிறியு நிரைநிரை யெடுத்த
அமரர் வாழியென் றகங்கனன் றெசிந்துநோக் குற்றார். (௨௨௦)

திங்க ளுங்குளிர் முத்தமுஞ் சிறிதுளம் வெதுப்பும்
அங்க ணண்ணலார்த் தணப்புறி னண்ணுறின் வதனப்
பங்க யங்களும் பரேரெறுழ்த் தோள்களும் பலவும்
கொங்கு தங்கிய தொங்கலுங் குளிர்ப்பன வென்றார். (௨௨௧)

மாழை வாண்முக நோக்கினர் மாதவ ராகப்
பீழை வாட்டிய பெருந்தகு தெய்வம்வே றுளதோ
ஆழி சூழுல கத்தென வடிமைபூண் டுவக்கும்
வீழி வாய்க்கவின் மங்கையர் விறந்தனர் மாடம். (௨௨௨)

தங்கள் வாண்முகச் சந்திர னெதிர்குவிந் தெனக்கைப்
பங்க யங்களைக் கூப்பினர் பண்ணவர் பெருமான்
துங்க வாண்முகப் பரிதிகண் டலர்ந்தெனத் தொழுத
அங்கை மாமலர் விரித்திரந் தாரரு வரங்கள். (௨௨௩)

சேந்த பங்கயந் திருமுக மென்றனர் சிலைவேள்
ஏந்து பங்கய மெய்தன ணிணர்த்தமாந் தளிரோ
காந்த சோகத்துத் தளிர்கொலோ கவினுரு வென்றார்
ஆய்ந்து மாரனு மக்கணை யிரண்டும்பின் றெடுத்தான். (௨௨௪)

இருகை யாற்கல வித்தொழி லியற்றலாற் றுமை
வருட நீவவெண் குறிசெயத் தழுவவார் கலையை
ஒருவி போச்சவொண் கரணங்க ளூறுற்றமுந் நாற்கை
பொருநி னேய்புலம் பறிதியெப் புரமதி யென்றார். (௨௩௨)

அரிவை குந்தமு மதிப்புரு வருந்தவ நுளமும்
அரிவை வன்படைத் தோற்றமா யன்மொழித் தொகையாம்
அரிவை யென்னுமப் பெயர்தழீஇ யனங்கன்வாழ் வுயர்த்தும்
அரிவை குந்தடங் கண்ணிப ரளவிலர் தொக்கார். (௨௩௩)

ஆட வர்க்குமிக் கணங்குசெய் கொல்லிமால் வரையில்
பீட மைந்தவப் பாவைபோற் பெண்பிறப் பினர்க்கு
நீட ணங்குசெய் பாவைகொல் லோநெடுங் களிற்றில்
பாட மைந்தொளி ருருவெனப் படரெழக் கண்டார். (௨௩௪)

மலர்ந்த பன்னிரு விழிகளும் வதனமும் வாயும்
அலர்ந்த கைகளு முந்தியு மடியுங்கண் டமர்வார்
பொலிந்த பங்கயக் காடுகண் டதனிடைப் புகவீழ்
ஒலிந்த வோதிமத் திரள்களே யொத்தார். (௨௩௫)

மகர வாய்க்குழை நிலத்திடை மாறுபு நக்கத்
தகர வார்குழல் பிறழமுன் றெரிவையர் தாழ்ந்தார்
இகலும் வேல்கணை படமறிந் திறைஞ்சினு ரொத்தார்
பகவ னாருண் மழைக்குவிழ் பசுங்கொம்பு மானார். (௨௩௬)

தாழ்ந்த மங்கைய ருள்ளகம் விருப்பெனுஞ் சரங்கள்
போழ்ந்து டற்றலி னெகிழுடை போற்றுவார் தாழ்ந்தாங்
காழ்ந்த நெஞ்சமோ டிருந்தன ராறுமுகக் கடவுள்
வீழ்ந்த தோடரி னலதெழா விரதங்கொண் டார்போல். ()

விண்ணிடந் துவன்றி நின்ற மெல்லியன் மாத ரெல்லாம்
வண்ணமென் புருவ வார்வில் வளைத்துவேள் சரங்க ளொன்னும்
கண்ணகை முல்லைப் போதுங் கறுகண்மா நீலப் பூவும்
அண்ணலங் கிலக்க மாக வெய்தன ரவச முற்றார். (௨௩௮)

எங்கணு முடிகள் கண்க ளெங்கணும் வதனம் வாய்கள்
எங்கணுஞ் செவிக ளுச்சி யெங்கணுந் தோள்க டாள்கள்
எங்கணு முருவ மின்னுற் கெனமறை யியம்பி யாங்கே
எங்கணுங் கண்டா மன்றற் கெய்திய தவத்தா னென்றார். ()

அடிகளா ருருவங் காட்டி யலங்கிய தெனுமார் வத்தால்
கடிதழல் சுடுவ தெண்ணார் கதுமெனத் தழுவி மோந்தார்
விடுசுடர்ப் பந்தர் மாலை வித்துரு மத்தைப் பற்றி
இடுகிடை குழைய மார்பத் திறுகுற வணைத்து மோந்தார். ()

கடம்பவிர் தார்க ளாகக் கற்பனைக் குவளை யாகத்
தடம்பொழின் மலர்க ளாகச் சாரலிற் சாந்த மாக
இடம்படப் பிறந்தே மில்லை யெற்றுக்குப் பெண்க ளாக
உடம்பெடுத் துழிதந் தேமென் றுற்பவ மொறுத்து நின்றார்.

தேம்பிய மருங்கு றேய்ப்பச் சீதளக் கலவை யாடப்
பூம்பசுந் தொடலை சூடப் பொழிகதிர்க் கலன்க டாங்கத்
தாம்பெரி தேங்கிற் றல்லாற் சண்முகற் றோய்தற் கோவென்
றோங்கிய முலைகள் காவா ருருவத்தோட் டுணையுங் காவார். ()

உறுப்பினுட் சிறந்த கண்கா ளுத்தமற் காட்டி யுள்ளம்
இறுப்பது புரிந்து நின்றீ ரெழிலுரு மீட்டு நோக்கிப்
பொறுப்பது வலித்து மேனும் பொழிமழைத் தாரை கொண்டீர்
கறுப்பொடு வெளிறி னீரோ காரிய முடிப்பி ரென்றார். (௨௫௦)

நந்தைபோ னுனது மார்புங் குறியுள தாமே னைக்கும்
பைந்தொடி யெங்கள் வாட்கண் பார்த்தற்கு மிசையாய் போலும்
அந்தர ரிடும்பை யோம்பி யருளினை யலக்க ணேப்பி
எந்தரத் தருளல் போலு மிசைவுறா திறைவற் கென்றார். ()

திருவுரு வனப்பை யெவ்வஞ் செங்கயல் விழியு முள்ளும்
தெருளுறு முயிரும் பேராச் சிறையகத் தாக்கிக் கூப்பும்
இருகையும் வணக்கங் கொண்ட விடையும்வன் சிறையி னீங்க
அருளினை புரவு ளாய்கொல் வடுப்பன வழகோ வென்றார். ()

இற்றைநாள் காறு மாத ரெதிருறநோக்கப் பட்டாம்
முற்றுநா நோக்கப் பட்டு முதன்மையின் வைகற் கிந்தப்
பொற்றொடி மாதை நோக்கிப் பொலிவுறல் வேண்டு மென்று
உற்றருந் ததிநேர் கண்டா ளொண்ணுதல் பார்வை யீந்தாள்.()

தேவர்கண் முதலோர் நீங்கச் சிலதிய ரேவ லாற்ற
ஆவபி னகன்று பள்ளி யறையடுத் தமளி வைகி
மூவிரு முகமு முந்நாற் கரங்களும் விழியு மாக
மேவுதன் னுருவா லின்பம் விளைத்துவீற் றிருந்தா னன்றே. ()

சென்றமுந் நாளும் வெவ்வே றுருக்கொடு திளைத்தா யென்னே
என்றமா துவப்ப வண்ண லிறுக்குமம் மூவர் மாட்டும்
ஒன்றுவித் துலகோர் மாதை யுறுவது முறையால் யாமே
மன்றலங் குழலா யன்னார் வடிவெடுத் தமர்ந்தா மென்றான். ()

திருமணம் புரிந்து வைவேற் சேவக னுலகுக் கெல்லாம்
பெருகுமங் கலங்கள் செய்த பெற்றியிற் றன்னஞ் சொற்றும்
உருகிய முழுவ லன்பி னுறுவர்கா ளமரர்ப் போக்கிக்
கருணையங் கடவுண் மாதர் கடாவிடை நடாவல் செய்வாம். ()

வள்ளிநாயகி திருமணப்படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — ௩0௩௬.

# விடையருள் படலம்

---

தாமரை குவளை கயிரவ முல்லை
சண்பகங் காந்தளுல் வகையின்
பூமலர்ந் தொளிரும் பன்மணி கான்று
பொன்னொளி தழைத்தெழுந் தெய்வக்
காமரு கொடியோ ரிரண்டொடு தழைத்த
கற்பகத் தருவென மணந்த
தேமரு குழலா ருடனமர் வரதன்
சேக்கையா யொழிந்தகன் றுளமே. (க)

பொன்னணி பூண்முலை வல்லி யோடு
பூவமல் சேக்கையி னிட்ட யர்ந்த
பின்னளவில் வேல்வலத் தெந்தை யன்றை
விடியலெ ழுந்துபல் லோர்து வன்றத்
தன்னிகர் மன்றல்செய் கோயி னீவித்
தானர சாளுமுன் கோயி லண்மி
மன்னிய தன்னிரு பானு மாதர்
வைகபென் பூவணை வீற்றி ருந்தான். (உ)

போதுநெ கிழ்ந்தவிழ் தீர்த்த மாடிப்
பூதிய ணிந்துகைப் போது தாங்கி
மாதவர் வானவர் வேதன் மாயன்
மற்றவர் மேற்படுந் தேவ ரேனோர்
ஏதமி றத்தமி ருக்கை யண்ண
வென்றூழு ளத்தொடி றைஞ்சி யேத்த
மேதக வாரரு ளல்கி யார்த்தி
வேட்டவ ரெங்கணும் போத விட்டான். (ங)

பன்மலை வாழ்நர்ப ரந்து சூழப்
பாங்கிபல் லாயங்கைத் தாய்நற் றாயும்
சொன்மலி தன்முன்வந் தோரும் பம்பத்
தோகைதன் றுதைமுன் போந்த டுத்து
வின்மலி பாதந்தன் சென்னி தீட்டி
விம்மிதத் தோடெதிர் நின்று போற்றிப்
பொன்மலி யிவ்வரை யென்றும் யாங்கள்
போந்துமைக் காணவி ருத்தி ரென்றான். (௪)

மாமன்மொ ழிக்கெதிர் நாம வேலான்
வாமம ணிநகை கொண்டு சொல்வான்
ஏமநெ டும்புவிக் கின்ப நல்க
வென்றுமிவ் வெற்பையி ருக்கை கொண்டாம்
மாமது சேர்ந்துமுப் போது நிச்ச
மாகண்ட லன்மலர் நீலம் பூப்பக்
காமரு கற்சுனை யாக்கி யிட்டான்
காண்மதி யத்தைபென் றீதும் விண்டான். (ரு)

முச்சக முந்தொழு தேத்த வள்ளி
மூரிவி லங்கலஞ் சாரல் வைகி
நிச்சமு மில்லற மோம்பி வாழ்தி
நீடிய வாயுளந் தித்த காலைப்
பொச்சமி லெம்முல கெய்தி மீளாப்
போகந்தி ளைத்தருள் சேர்தி யென்று
கச்சமில் பேரரு ணல்கி விட்டான்
கானவன் கைதொழு தேகு கின்றான். (௬)

முந்துற விந்திரன் மாம களார்
முன்னர டித்துவ ணங்கிப் போற்றிச்
சுந்தர வல்லியை யண்மி நீடத்
தொழுதுநின் றேவப்பெ யர்ந்து போந்தான்
பைந்தொடித் தாயரு மேனை யோரும்
பாங்குற மூவர்க்குந் தாழ்ந்து கூறிக்
கொந்தொளி மாமணி யிட்டுப் போதுங்
கோளர விற்கருத் திட்டுப் போந்தார். (எ)

யாவருந் திருவரு ளெய்திப் போதலும்
மூவரும் வழிபடு முதல்வ னோக்கினால்
பூவரு மடந்தையைப் புற்கென் றாக்கிய
மேவரு மாதரான் மேவித் தாழ்ந்தனள். (அ)

தழுவின ளெடுத்துட றைவங் தெங்கைநீ
விழுமிய துணையென மேவி னையெனக்
கெழுவிய காதலிற் கிளந்து விண்ணவர்
தொழுகுல யானைதன் றுணைவற் றாழ்ந்தரோ. (௯)

யாரிவள் வேடர்தஞ் சார்பி லெய்துறுங்
காரணம் யாதிவட் கரைதி யென்னலும்
வாரணம் வளர்த்தவள் வதன நோக்குபு
வாரண முயர்த்தவன் மகிழ்ந்து கூறுவான். (௧௦)

மருமலர்த் துளவினான் மகளி ராகமுன்
இருவருந் தோற்றினி ரெம்மை மன்றலிற்
பொருந்திய சரவணப் பொய்கை மேவியங்
கொருவரும் பெருந்தவ முழந்து வைகினீர். (௧௧)

ஆவயி னும்மையா படித்து விண்ணவர்
காவலன் மகளெனக் கான வேட்டுவன்
மேவரு மகளென மேக வென்றனம்
மேவியாங் கிருவிரு மெய்தி வைகினீர். (௧௨)

திருப்பரங் குன்றிடைச் செல்வி தன்னையாங்
கருத்தினை முடித்தனங் காவி யிங்கிவள்
அருப்பிளம் பூண்முலை பணைந்து மன்றலிற்
பொருப்பிடை பாற்றினர் புலவர் போற்றவே. (௧௩)

பொருந் குழவியாத் தவழ்ந்து சேர்தொறுங்
காயிலை வயிரவேற் கடவு ணாயகன்
பாயிருங் கடற்பொழி பகட்டை யேவலும்
அப்படை யதுநினை வளர்த்த தாயரால். (௧௪)

ஈங்கிவள் சென்றது மெய்துந் தோற்றமும்
ஆங்கவன் வளர்த்தது மறியக் கூறுகேன்
பாங்குறக் கேளெனப் பட்டி மைக்குவட்
டோங்கலைத் துளைத்தவ னுரைத்தன் மேயினன். (கரு)

பிள்ளை மதியு மரவும் பிணைசடில
வள்ளல் கழற்கான் மறவா வழிபாட்டின்
கள்ளப் புலன்வென்ற கண்ணுவ மாமுனிவன்
ஒள்ளிய வைகுந்தத் துற்றா னொருவைகல். (கசு)

புள்ளே றுயர்த்த புயல்வண்ணன் றன்னோடு
தள்ளாத வார்வத் துரையாடச் சார்குற்ற
விள்ளாத சீர்த்தி விரதத் தவன்கோயில்
உள்ளா லவனிருந்த வோங்கு சபையடுத்தான். (சஎ)

ஓங்குதன் கூற்றுன் முச்சக மளந்த
வுபேந்திரன் முதலியோர் சூழப்
பாங்குறு நளினப் பணிமலர்ப் பீடப்
பாவையோ டிருந்தபொன் னுடையோன்
ஆங்கெதி ரடுத்த முனிவனை நோக்கா
னையென விருக்கைநின் றெழான்மற்
றீங்கனை கென்ன மொழிகளும் பயிற்றா
னிருக்கையு மளித்திடா திருந்தான். (கஅ)

நன்றிவ னகந்தை யெனமுனி வெகுண்டு
நசிக்குமித் திருக்கொடு தருக்கிப்
பொன்றுநல் லறிவை மூகைபோ னிருந்த
புயல்வணு பொருகடற் கதித்த
வென்றியங் கடுவை மிடற்றகத் தடக்கும்
விகிர்தனர் வேடமெய்ப் படுத்த
என்றனை யிகந்தாய் மூகைமைப் பிறவி
யெண்ணில வுறுகெனச் சபித்தான். (கக)

கானகத் துழலு மிருகமொத் திருந்த
கமலநாண் மலரணைக் கிழத்தி
நானுநெட் டிருங்கண் மான்வடி வனந்தஞ்
சார்ந்திடப் படுகவென் றுறுத்தி
ஊனமுற் றிரியத் தெள்ளிய வறிவி
னுபேந்திரன் முதலியோர்ப் பாரா
ஈனமுற் றடுக்கும் வேட்டுவப் பிறவி
பெண்ணில வெடுக்கவென் றிறுத்தான். (௨௦)

ஒருவருஞ் சாப முறுத்திய முனிவ
னெப்பெனப் பெயர்ந்துதன் னிருக்கை
மருவினன் மாயன் முதலியோர் வெருவி
மழைமிடற் றிறைவனை முறையான்
இருவினர் வழிபட் டேத்தநின் மலனு
மெதிரெழுந் தருளியஞ் சலிரென்
றருளியம் முனியை விளித்திவர் சாப
மனுங்கொரு பவத்தினென் றறுத்தான். (௨௧)

ரோத்தமெம் பெருமான் றிருவெழுத் தைந்தையென் வாக்காற்
சொல்லுதல் வேண்டுங்கொன் முழுதும்
காத்தரு ளிறைவ வடியவர் மாட்டுக்
கருணையை விளக்கினை சாபம்
வித்தொரு பவத்தி னிவ்வெலா முன்போ
மேகவென் றுரைத்தடி யிறைஞ்சி
ரத்தினன் விடைபெற் றேகினன் முனிவ
னெம்பிரா னருள்பெய்து மறைந்தான். (௨௨)

உலகேனையும் வேற்கண்ணு யுபாய பாத தொடக்கதலு
காமேனையு மலர்ச்சோலை கமழ்வல்லைத் தனிமைக்கண்
மேனையு நினைப்பொதும்பர் மேற்படி வளைத்தாள்
தேனேயு தாளினன் சிவபுரியாய்த் தவபுகந்தான். (௨௩)

அவ்வரைசூழ் நெடுங்கானத் தடுக்கிதழ்ச்செம் மலர்வாழ்க்கைக்
கொவ்வைநறுங் கனியிதழ்வாய்க் கோற்றொடிக்கைத் திருமாது
மூவ்வுலகு மதிசயிப்ப முழுக்கனக வொளிதுளும்ப
நவ்வியுரு வெடுத்தன்னோ நவ்வியினத் தொடுமுழன்றாள். (௨௪)

சுற்றமெலாஞ் சிலைவேடர் தொகையாக வெக்கலையும்
கற்றுணர்ந்த வுபேந்திரனுங் கானவர்க்கோ ரிறைமகனைப்
பொற்றவளந் திகழ்குறிச்சிப் புளினரிறை பானுதித்தான்
மற்றவன்பல் கிளைதுவன்ற வரையரசு புரிகின்றான். (௨௫)

மைந்தர்பலர் தமையின்று மகளின்றி வருந்தினான்
முந்தையருந் தவப்பேற்றான் முனியெதிரப் பிணைபடுப்ப
அந்தில்விழிக் கலவிமுனி யாற்றினா னஃதோடி
நொந்துயிர்த்து வேற்றுருவ நோக்கிபகன் றதையன்றே. (௨௬)

பரிவகலச் சிலைவேடன் படர்ந்தெடுத்து வளர்த்திட்டான்
அரிமதர்க்க ணிளமுறுவ லந்நலா யறிகென்றான்
தெரியிழையாண் மகிழ்சிறந்து சேட்பட்டுக் கிடந்தேமை
உரிமையுற வுடன்வைத்தா யுத்தமவென் றடிதொழுதாள். ()

இற்றைநாள் பயன்பெற்ற நாளன்றோ வெமக்கென்று
கற்றைவார் நறுங்கூந்தற் கானவர்தங் குலமகளைப்
பொற்றொடிக்கை யாலண்மிப் புல்லினார் பூரித்து
மற்றவளுய்ந் தேனென்று மறுவலுஞ்சீ றடிபணிந்தாள். (௨௮)

ஆனந்தந் தலைசிறப்ப வளவளா வியபின்றைக்
கானந்து மலர்க்கூந்தற் கானவர்தங் குலமாது
தேனந்து மலர்க்கடப்பந் தெரியலான் கழல்வணங்கி
வானந்து மித்தணிகை வரைவாய்மை யருளென்றாள். (௨௯)

வாடிய தேவர்கள் வன்சிறை
சாடிய வேற்படைச் சண்முகன்
ஓடரி மாமழை யுண்கணாய்
பாடுதுங் கேளெனப் பன்னுவான். (௩௦)

வளமலி காஞ்சிதன் வைப்பிடை
அளவலி னிந்தவ டுக்கலே
நளிவள மாநக ரேழுளும்
ஒளியொடு சீர்த்துயர் வுற்றதே. (௩௧)

விலங்கலுள் வெள்ளி விலங்கல்பாப்
பலங்கலி னூர்க்குரித் தாங்கெமக்
கிலங்குப லோங்கலு ளிவ்வரை
பொலங்கொடி யார்வம் புணர்ப்பதே. (௩௨)

விரைமல ருள்விரி கஞ்சமும்
திரைநதி யுட்டிகழ் கங்கையும்
புரைதப வோங்கிய போன்மென
வரைகளி னிவ்வரை மாண்பதே. (௩௩)

உருத்தெதிர் தானவ ருள்ளுயிர்
வருத்துபு மீண்டிவண் வந்துநாம்
செருத்தணி வெய்தலிற் சீர்ப்பெயர்
செருத்தணி யென்று சிறந்ததே. (௩௪)

அஞ்சன மேனி யவுணர்போர்
விஞ்சலு ருப்படை விண்ணவர்
எஞ்சலி லாதெய்து மாண்பினும்
வஞ்சியன் னையது வாய்வதே. (௩௫)

எப்பகை யுந்தரு மீண்டிருள்
துப்புடைத் தொல்செருத் துன்னினார்
வைப்பிடைத் தாக்குதும் வண[illegible]னா
அப்பெய ரிப்பதிக் காயதே. (௩௬)

என்று மிங்குநாம்
மன்ற வைகுதல்
நின்று நீலமே
நன்று ணர்த்துமே. (௩௭)

காலை காய்பகல்
மாலை மாமலர்
நீல நேரவிங்
காலவ மர்கின்றும். (௩௮)

ஐந்து நாளசைந்
தெந்த மிணையடி
வந்து வணங்கினோர்
பந்தம் பாற்றுவார். (௩௯)

வீடா வினைமிக் குடைய ரேனும்
நாடா விவணண் ணினவ ரேமெய்
வாடா தவர்வா னவரின் மேலாம்
பீடா யினர்மெய் வளைக்கை நல்லாய். (௪0)

அறந்தாம் பலவாற் றுநர்க ளேனும்
சிறந்தா ரெனச்செப் புநர்க ளேனும்
பிறந்தா ரலர்பெட் டிவணு றரேல்
மறந்தாங் கிபவாள் பொருது கண்ணாய். (௪௧)

பழிதீர் குறும்பல் லியமி யம்பிக்
குழலூ தியுங்கோ டுகளி சைத்தும்
எழுவான் றுகர்மஞ் ஞைபிவை யூர்ந்தும்
விழைவால் விளையாட் டயர்து மீண்டே. (௪௨)

என்றே யிவையா தியுற வெல்லாம்
நன்றே தெரிவித் தருளு நம்பி
துன்று வருள்கொண் டனமென் றன்பின்
புன்றூழ்ந்து மொப்பூங் குழன்ம கிழ்ந்தாள். (சங.)

படைவேல் வலம்பற் றுகும ரேசன்
விடைமே வரவீ சியது சொற்றும்
நடைமே தகுநா ரதன டுத்துத்
தொடைபான் விடைசூழ்ந் தமைகி ளப்பாம். (சச)

விடையருள்படலம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் — கூ௦அ௦.

---

## நாரதனருள்பெறு படலம்

---

போர வாப்பா ருஞ்சின வேற்கணார்
வார மாய்மறு கும்மயர் மாக்கடல்
தீர வான்கரை சேர்க்கும் புணையரோ
நார தீச்சுர ணண்மலர்ப் பாதமே. (க)

பன்றற்கா ழேங்குவளை பொன்மலர்வி ரிந்தகளை
மல்குகயி லைக்க ணொருநாள்
சொன்மையுளை சொரபுல மன்றிபபொப நாப்புனல்
குறுங்துளியெ னக்க துவுற
வென்றருளு மங்கரான னைக்கொடிய டங்கலினை
மீமிசையி ருப்ப வெவரும்
தூன்றினர்ந யப்பாரர் நந்தலயு பங்கவொனிர்
துன்றுபுப ணிந்து தொழுதான். (உ)

வாரியும்வ டித்துநளி புந்தியுமு றழ்ந்துமணி
யாழினிசை பாடி முனிவன்
ஒருமருள் பெற்றவனொ ழிந்துபெயர் கின்றவ
னுளத்திடை யயிர்த்தஃ துதான்
தீரவொரு தாதைபயில் வானுலக மண்மியெதிர்
சென்றடிவ ணங்கி யிறைவ
வாரமொடி யான்வினவ நீபருள நின்றதொரு
வாய்மையிது வென்று மொழிவான். (௩)

இலிற்றுமழை மும்மதவெ றுழ்க்களிறு வெம்பரி
யெழிற்சிவிகை தேர்முத லொரீஇப்
பிலிற்றுமது நண்டுகண றுங்கடிய கொன்றைபிறை
வேணிமுடி வைத்த பெருமான்
வெளிற்றுவிடை யூர்திகொள லென்னைவிரை யார்பொருள்
வேண்டியவி ருப்ப வணியா [கள்
தொளிற்றுருவ நீறணித லென்னெனவிவ் வாறுபல
வுங்கடவி னன்க டவலும். (௪)

நோற்றலின்மி குத்தவற வோயிவையெ மக்கெளிய
வல்லநுத னோக்கின் மதவேள்
ஆற்றலுட லம்பொடிப டுத்தவிறை யேபதியு
மாங்கவனு தற்க ணருளும்
வேற்றலைவ னேபதியு மன்றியறி வாரிலை
விசாகனைய டுப்பி னவனே
தேற்றுவன தற்குரிய தேயமுய ருந்தணிகை
சேறியென வோதி னனயன். (௫)

கந்தவரை யாதிபல வுங்கடவு ளார்சிறை
கடிந்தமுரு கன்வ திவுற
எந்தைதணி கைக்கிரியு ரித்தெனமி குத்துரை
யியைத்திதணி கைப்பெ ருமையைச்
சிந்தையின்ம யக்கறவு ணர்த்துதியெ னப்பணிதல்
செய்தன னெழுந்து முனிவன்
தந்தைகும ரன்கழனி னைந்துதணி கைப்பெருமை
சாற்றுதல் வலித்த னனரோ. (௬)

அரம்புபுரி யாணவம ருட்டவறி வற்றிரு
ளகன்றவறி வேகி லயமாய்
வரம்பிலரு ளீசனுரு வுங்கொடுபி றர்க்கருள்
வழங்குமொரு வாய்மை யறியா
திரம்பயில்வி லாதவிளை யாமெனவ ணாங்கில
ஞெழிந்துபடை வேல வனையான்
நிரம்பியபெ ருங்கருணை யாளனவ ணங்கிநெறி
யாற்பெயர்வு கொண்டி யறலும். (௭)

வேதமுத லோதுபொருள் யாதெனவி ஞெயனை
விதும்புறவ துக்கி நெடுநாள்
காதுசிறை வைத்திரச தக்கிரிக ழன்றுகவி
ஞன்றவட வேங்க டமுறீஇத்
தீதறவு யிர்த்தொகுதி நல்கிபிறை யேவவிடு
திண்சிறையெ னக்கொ ருவுவித்
தாதிவின வச்சுருதி யாதிமொழி யின்பொரு
ளறைந்தவரை யந்த வரைகாண். (௮)

ஆருயிர ளிக்கும்வர மெய்தமல பக்தனிமை
யின்கணவிர் மூன்று சிகரத்
தேருமொரு வெற்படயி ருந்துதவ மாற்றியிறை
யோனடிப ணிந்து பரவ
வாரணிர டைப்பரம னேவலின டுக்கருளி
லிங்கம்வழி பட்ட ணவியான்
சாரரிய மாதவமு ழப்பவுல காக்குமரு
டந்தவரை யந்த வரைகாண். (௯)

இலைப்பரைகி ளைத்துநெடு பாலுபய பாதவிறை
யோனருளி ஞல ணவியெக்
கலைப்பொலிவு முற்றுமரு ணங்கிதவ மாற்றவெதிர்
காமர்மயி லூர்தி வெளிநின்
றலைப்புனலி னுந்தியைய மைதகதின மூக்தியருண்
ஞானமும ளித்தி ரவியிற்
றலைப்படுமொ ரிக்கமெனை யின்பநிறை விற்புணர்வு
தந்தவரை யந்த வரைகாண். (௧௦)

கும்பமுனி யண்மிநனி யார்த்துநட மிட்டவருள்
கூர்பரன டிக்க ணுறுநீர்
வம்பலர்செ ரிந்தயல்வ ராகபுரம் வைகியொளி
வாய்ந்தசிவ லிங்க மிருவி
நம்புசிச ரத்திடையி வர்ந்துதவ மாற்றநவை
தீர்தமிழ்வி ரிக்கு முதன்மை
பம்புசிவ ஞானமொடு பன்னிருகை யாரியன்
பணித்தவரை யந்த வரைகாண். (கக)

இந்திரனு யிர்த்தமக னொடமரர் தங்களை
யிருஞ்சிறைப டுத்த வவுணர்
வெந்திறனெ டும்படைய ழைத்தையு முடித்துவிறல்
வாகைமுடி சூடி யவுணர்
முந்துகவர் மாயன்முத லோர்திருவெ ழுத்தையு
முகந்துகொடு போந்தி ருவுபு
பிந்தணவி யாங்கட்வ மாற்றிபிறை நல்கவவை
பெற்றவரை யந்த வரைகாண். (கஉ)

முன்னரொரு காலமற வோய்தணிகை நாதனடி
முன்னிநெடு மண்ணி னுறுநீ
அன்னநடை யன்னநடை மின்னிடைம ருங்குலமிழ்
தன்னமொழி மஞ்ஞை யியலின்
கன்னிகவி னின்னதென வன்னவன டந்துகளை
வாற்றியுட னுய்த்தெ வர்களும்
துன்னவது வைத்தொழின்மு டித்துவிளை யாடல்புரி
தொல்லைவரை யந்த வரைகாண். (கங)

மேதகவி ளங்குமதன் மான்மியம னந்தமுள
வேற்கடவு ளேய நியுமால்
ஆதலின னுக்கிரகம் யாவுமவ னேயுடைய
னவ்வருள்வ ழங்கு மிடமும்
ஓதியது வேநனிதெ ரித்தியென வோதிம
முயர்த்தவன சத்த விசின்மேல்
வேதியனு ரைப்பமகிழ் வுற்றடிப ணிந்துவிடை
பெற்றனனல் வீணை முனிவன். (கச)

அற்றையிராப் புலர்காலை யைதுவெண் ணீறுதரித்துப்
பற்றியயோ கமுழந்து பணிந்துபிரா னைப்புறம்போந்
துற்றவிதிப் படிகோறின் றுமிழ்ந்துநறும் புனறோய்ந்து
முற்றுறநாட் கடனாற்றி முதல்வனையண் மிப்பணிந்தான். (௨௨)

பாம்பணர்ந்தன்ன பைங்கோட்டுப் பன்மணிமா டகத்தள்ளற்
றாம்புறைஞெண் டின்கணன்ன துரப்பமைபா ணித்திவவின்
ஒம்பியபச் சையினல்யா ழொண்கைபிடத் துத்தழுவித்
தேம்பயிறந் திரிதொட்டுத் தேக்கினன்பண் ணரமிழ்தம். (௨௩)

மிதுனம்பயில் கின்னரங்கண் மெய்சோர்ந்தவனி பின்வீழக்
கதுமெனவற் றன்மரங்கள் காமருமென் றளிரீன
முதுவரைநெக் குண்ணெகிழ முன்னின்றுபா டியபின்றைச்
செதுமறுமா முனிகோயிற் றிருமாளிகை வலஞ்செய்தான். ()

வலம்புரிகா லைகிருதி மாதிரத்தண் மைபிற்றேன்றும்
அலம்புபுனற் சுனைநோக்கி யார்வமொடங் கணடைந்து
சிலம்பரசன் முருகேசன் சேவடிசிந் தைபிருத்தி
நலம்புரியோ கினிருந்தா னுமந்நீர்ச் சுனைதோய்ந்து. (௨ரு)

பன்னெடுநாள் கழிவெய்தப் பாரிடம்வின் னவர்சூழப்
பின்னர்நெடு குங்கலாவப் பிணிமுகமூர்ந் தெனையாளும்
கொன்னவில்வேற் படைவள்ளல் குறுகினன்வல் லையெழுந்து
பொன்னவில்பா தமிறைஞ்சிப் போற்றினனா ரதன்மாதோ. ()

தடவரை மணியொளிர் தணிகையங் கிரியினை
கடவுளர் சிறைதபு கருணையங் கடலினை
கடவுளர் சிறைதபு கருணையை யாதலின்
இடர்தப வெளியமு மிணையடி பரவுதும். (௨எ)

மகளிர்க ளிருவரின் வதிதரு மெழிலினை
துகளறு துறவியர் துறவியென் றிலகினை
துகளறு துறவியர் துறவியை யாதலின்
இகலற வெளியமு மிணையடி பரவுதும். (௨அ)

அரியய னமரரு மடிதொழு மமரனை
எரிசடை யிறைபணி பிறைமைபி னில்வினை
எரிசடை யிறைபணி பிறைமையை யாதலின்
உரைபெற வெளிபமு முனகழல் பரவுதும். (உகூ)

என்று தோத்திர மிபம்பிய பெருந்த வனெழுந்
தொன்று செங்கைமுடி வைகவுரை தள்ள வுடலில்
துன்று மென்மயிர்பொ டிப்பவிழி நீர்து தையநேர்
நின்ற னன்வரநி கழ்த்தென நிகழ்த்த லுறுவான். (ஙo)

கடுத்த யான்றெளிய வேதலெதிர் காட்சி பிறைநீ
கொடுத்த வைகலிது கன்னிமதி கூர்த லையுவா
அடுத்த வத்தமிதி லாடிய்தி னிற்ப ணிகுவோர்
விடுத்து வல்வினைவி ளைந்தபெற நல்க லெனலும். (ஙக)

தந்த னம்வரமெ னத்தவனு டங்கு படரக்
கொந்தொ ளிக்கதிர்செய் கோயிலினு றைந்த வனிருந்
தந்த ஞவ்வளம யிர்த்தகதெவ ஞேது நியென
எந்தைபுப்தனனெ னத்தொழுதி றைஞ்சி மொழிவான். (ஙஉ)

கேழி லாதகிளர் பேரொளிய ஞதி பிறைவன்
பாழி மாகிருள்ப டிப்பவுறு நூப வுருவன்
ஊழி ஞல்வறுமை யுற்றுமதி கெட்ட வர்கள்போல்
வேழ மாதிசள்வி டுத்துவிடை யூர்ந்த தெவனே. (ஙங)

நாறு சாந்தநறு நீர்புழுகு நல்ல வொருவி
நீறு நாளுநிபிர் மேனிதிமிர் கின்ற தெவனே
ஏறு மாமணியி ருப்பவிழி வெண்பு தலைநந்
தூறு பாம்பிறகெள் ளோடுலவை கொண்ட தெவனே. (ஙச)

ஆடை திரவகள் கொண்டதெவ னங்கி மாழுபா
ஞேடு நீர்மகிச மந்ததெவ னைய கலைபின்
நீடு வானமிழ்த நீக்கிவிட முண்ட தெவன்மெய்ப்
வேடம் வேறுறவெள் வேறுறநி கக தெவனே (ஙரு)

திருத்த குங்கடவு ளார்திரளி ருப்ப வசடு
பெருத்த பாரிடர்ம ருங்கமைவு பெற்ற தெவனே
வருத்த முற்றுகனுழ் தற்பொருள்வ ழங்கி வருமவ்
வுருத்தி ரப்பெயரு கப்பொடுதெ ரித்த தெவனே. (ரு௬)

கடிஞை கொண்டுபயிக் கம்புகுவ தென்னை கனல்சேர்
சுடலை யாடுதொழி லென்னையுறு தூர்த்தர் விழைய
விடைவி டாதுவரை மாதொடுமி ருப்ப தெவனே
உடனி ருந்தவுமை காணநட மாட லெவனே. (ரு௭)

வீணை மாமுனிவ னின்னணம்வி ளுவ மகிழாக்
கோணை வேல்வயவன் கும்பமுனி வன்ப ணியமுன்
ஓண ஞர்க்கரிய வுத்தமனு ரைத்த னனிவை
மாண மற்றினிவ குப்பலென வாய்ம லருமால். (ரு௮)

ஆயிரத் திரட்டிச் சதுருக மொருநா
ளயற்கது முப்பது திங்கள்
ஆயவத் திங்கள் பன்னிரண் டாண்டவ்
வாண்டுநா றுயுளவ் வாண்டு
மாயவற் கொருநா ளம்முறை நூறு
வருடமு மரீஇப்பெயர் காலை
மாயவன் முதலா முலகெலாம் பரந்து
வயங்குசெந் தீக்கரந் தனுமால். (ரு௯)

அத்தகு முடிவொன் றெய்தலு முலக
மழிவுநோக் கியவறக் கடவுள்
இத்தகு முடிவிங் கெய்துமே நமக்கு
மென்றுளம் விரும்பியேற் றுருக்கொண்
டுத்தமற் பணிய வுரன்முத லருளி
யூர்தியாக் கினன்விறன் மாலும்
வித்தகன் புரங்கொன் ஞான்றருள் பெறுவான்
விடையெனத் தாங்கின னறிதி. (௬0)

குரைபெரி சவட்டப் பொன்றிய வமரர்
கோழுட னீறிய நீறு
நரைநகு தலையு மங்கமுந் தனது
நல்லுரு நித்தியத் தியல்பும்
புரைபடு மேனோ ரநித்தியச் செயலும்
புகர்தபத் தெரிந்தொரு முதல்வன்
பரைபிடங் கொண்டோ னெனவுயிர்த் தொகுதி
படர்ந்துவீ டுறும்பொருட் டணிந்தான். (௪௧)

மாயனை யயனை யெரித்துநீ றங்கம்
வண்டலை யணிந்திடு மொருகால்
தூயவன் னவரைச் சூலவாய் மடுத்துத்
தோளணி யாக்கிடு மொருகால்
ஆயவப் பொழுதின் முடிச்சிகை வாங்கி
யகலத்து நூலென வயக்கும்
நாயகன் செயற்கை தெரிக்குநர் யாரே
நன்றவர் புரிதவப் பேற்றான். (௪௨)

மறைகவ ரவுணற் செகுத்துமீட் டுலக
மறுகுற வுடற்றிய மீனை
முறைபுரிந் திடந்த விழிபினை மீட்டு
மூரிமா றருக்குறு வண்ணம்
இறையவ னணிந்தா னெஞ்சபூ வொன்றற்
கெதிர்மலர்ப் பங்கய விழியோன்
றறைசழற் பதத்து மற்றொரு காலத்
தணிந்தன னூழிவேட் டரியே. (௪௩)

தாபக்கலாம் விளைத்த மாற்றவ னுயிர்க்க
தனயரென் றிகல்கொடு கருடன்
ஊக்கமிற் கலைப்ப வுளைத்தராத் தொகுதி
யுற்றடிப் பூசனை யுஞற்ற
நீக்கமி லணிக ளாக்கின னிமல
னீடுதா ருகவனத் தவர்வேட்
டாக்கிமே லுகைத்த வாளரா வினமு
மணியெனத் தாங்கின னறவோய். (௪௪)

தொக்கபே ராற்றன் மிகும்விராட் புருடன்
றொல்லுடன் மயிர்தொறுந் தூங்கும்
தக்கபே ரண்ட மனைத்துந்தன் னகட்டுட்
சார்த்துவான் சார்ந்தனன் றொடங்கும்
கொக்கின்மா னுருவிற் றுனவற் செகுத்துக்
கோலவெள் ளிறகினை யவன்போல்
மிக்கபே ராற்ற லுடையவர் தருக்கா
வினைகொள முடித்தனன் விமலன். (௪௫)

மீன்முகப் பரவை கடைந்தஞான் றாழ்ந்த
விலங்கலைக் கமடமாய்த் தாங்கும்
தேன்முகத் துளவோன் செருக்கினைற் றருக்கித்
திரைகட லிறுதிநாட் போல
வான்முகத் துலகு மலைப்பகின் றலைப்ப
வல்விரைந் தோட்டினைப் பறித்துக்
கான்முகக் கடுக்கைச் சிவபிரா னீறு
கதிர்த்தமார் பத்திடை யணிந்தான். (௪௬)

தமனியத் தடங்கட் டானவன் புடவி
தன்னகத் தடக்கினன் பெயர
நிமிர்பெரு வரைபோ லேனமாய்த் தொடர்ந்து
நேர்ந்துயிர் குடித்தனன் மீட்ட
குமரியந் திகிரிப் படையினோன் றருக்கக்
குறுகியோ ருலவையைப் புயர்ந்து
திமிரவல் விடநின் றொளிர்மணி கண்ட
னேட்டொடுஞ் செறிதர வணிந்தான். (௪௭)

உடங்குல கனைத்துந் தாட்படுத் தோங்கு
மிரணிய னுயிர்குடித் தெழுந்த
மடங்கலந் துளவன் மலியுயிர் குமைப்ப
வண்சிறைச் சிம்புளாய்த் தாக்கி
அடங்கவுட் செருக்குச் சிரத்தினைச் சிரமே
லயன்சிர மீச்சுமாய்ப் பரித்துத்
தடங்கிளர் தோளி னுத்தரா சங்க
மாக்கினன் றயங்கிய வுரியை. (௪௮)

காதியெவ் வுலகுங் கடவுளர் முதலோர்
கரந்துறை காசிமா நகரும்
மோதவங் கடுத்த கயாசுர னெதிரே
மொய்த்தபே ரொளியுருத் தாங்கி
மேதக நின்று கிழித்தெடுத் தமர்ந்த
வியனுரு நோக்க லாற்றது
மாதவர் முதலோர் வருந்தவவ் வொளியை
மறைத்தனன் படாமெனப் போர்த்து. (௪௯)

உயிர்க்குயி ராய்நின் றுறுவினைப் பயன்க
ளூட்டுநம் மிறைவனை யின்றி
இயக்கும்வண் கருமத் துயர்கதி யடைவா
னெண்ணின ரிருந்தவ முழக்கும்
செயிர்க்குணத் தாரு வனத்தினர் திருக்கைத்
திருக்கவெற் றரையொடுந் தானோர்
பயிக்கனைப் நெடுமால் சுந்தர மகளாய்ப்
பாங்குறப் படர்ந்தனன் வனத்து. (௫௦)

தவம்புரி சூழ லரிவைபோய் மருட்டத்
தகையெழிற் பனத்தியர் சேரிச்
சிவந்தகைத் தலத்துச் சிறுபறை கறங்கச்
சென்றுலாய்ப் பலியிட வணங்தோர்
நவந்தவெங் காமக் கனலுளங் கொளுந்த
நிறையொடு கலைவளை மாமை
கவர்ந்தனன் றெரிந்து கடவுளை முடிப்பான்
கண்ணிவேட் டனரருந் தவத்தோர். (௫௧)

கொடுமகத் தழலி னிடிக்குரற் பேழ்வாய்க்
குயவரி வேங்கைபொன் றெழுத்தாழ்ந்
தடுதியென் றுகைத்தா ரரியுகிர்க் கிழித்
யரைக்குடை யாக்கினன் பின்னர்
விடுசுடர் மழுமான் வியாளம்பா ரிடம்வெண்
டலைவர விடுத்துமந் திரத்தைக்
கடவிவேட் டெழுந்த முயலகன் மகவெங்
கனலையு முடன்குற விடுத்தார். (௫௨)

மழுப்படை யாக்கி மறிதுடி யெனச்சென்
மந்திரஞ் செவிகளிற் றழங்கத்
தழிக் ரத் துயர்த்துத் தலைதலை யணிந்து
தழலொரு கரத்துறீஇப் பூதர்
குழுப்புடை பெயரா விழுப்படை யாக்கிக்
கொழுவலி முயலகன் வெரிந்தாள்
அழுத்திநின் றாடி யயருல குய்ய
வடுத்துமை காணநோக் களித்தான். (ருஙு)

விடைபொடி விழியென் பழிதலை யராவெள்
ளிறகுமா லோடுகோ டதடீப்
படைமழு மறிவெம் பாரிட மியைந்த
பரிசுமை யம்புகு பரிசும்
உடையவ னடன முமையவள் காணு
முண்மையு முரைத்தன முமைகாண்
நடைபிணி மகவுக் கறமருந் தன்னை
நாடியுண் டாற்றுதல் போலாம். (ருச)

வயிரவ னெனுந்தங் கூற்றினு மையம்
வையகத் தேற்றன னதுவும்
பயிலுமற் றனவுந் தெரிக்குதுந் தெரிதி
பழவினைப் பற்றறு தவத்தோய்
அயனரி மேரு வரையிடை யொருஞான்
றமர்ந்துடங் கிருந்தனர் தேவர்
நயனுறு முனிவர் நண்ணினரேக
நாயகன் யார்நவில் கென்றார். (ருரு)

மம்மரின் முழுகு மலரவன் யானே
யென்றனன் மாயவன் யானே
செம்மலெண் குணத்துப் பிரமமென் றுரைத்தான்
செருக்கினு லின்னணங் கலாய்ப்ப
மும்மறை குடிலை வேறுவே றணுகி
முக்கணெம் பிரான்பரம் பிரமம்
அம்மவென் றுரைத்துந் தெளிகில ராக
வமலனு ரெதிருற வடுத்தார். (ருசு)

